# மாணிக்க வாசகர்



வடுவூர் கி. துரைசாமி ஐயங்கார், B.A.,
நூலாசிரியர்,



இரண்டாவது பதிப்பு



கே. விஜயம் கம்பெனி,
இராயப்பேட்டை, சென்னை.

விலை] [அணா 8.

# INTRODUCTION

MANIKKA-VACHAKAR, the hero of the play, is the earliest of the galaxy of four Saiva Saints, who have in their sublime poems sung the praises of God SIVA, enriched our sacred Tamil Literature in its philosophical side, and having left behind them immortal fame, won their freedom from physical bondage by their extreme devotion or Parama Bhakthi. Bodies may die but their fame will never disappear.

MANIKKA VACHAKAR was a Brahmin, born in TIRUVADAVOOR, a village 6 miles south of Melur. His original name was VADAVOORAR. Before his 16th year, he became proficient in all Sastras and Agamas and an eminent Tamil scholar.

King ARIMARDANA, who was then the Pandiyan king hearing of the greatness of the scholar and poet, invited him to his Darbar and appointed him as Prime Minister. Under the able statesmanship of Manikka Vachakar, the administration of the kingdom was being carried on without failure of justice. The people enjoyed prosperity and plenty.

But times changed. As usual in the history of every country, our hero saint also had a set of rivals, who became jealous of his eminence and were conspiring to bring about his fall.

At that time the king heard of an invasion of Pandiyan Territory by Chera armies. The king and his ministers sat in cabinet, and began to discuss the method of self defence and to counter-act the threatened invasion. The Commander

announced that the cavalry was not sufficiently strong, and if it was not strengthened by the import of new and strong horses, he would be unable to cope with the task that might be assigned to him. The king had the greatest confidence in our hero. In those days, horses were imported in the ports of the eastern coast (Bay of Bengal), and our hero was despatched with all paraphernalia and with large sums of money for the purchase of horses.

Manikka Vachakar, on his way to the coast, one day, encamped at THIRUPPERUNDURAI, a famous ancient Saiva-stalam. He worshipped the God and by chance met a Saivachariar with his disciples. He had his Upadesam or initiation. And from that moment he became one of the famous Sivabhaktas. He entirely forgot himself and his mission. He found the temple in a ruined condition. Just as RAMADAS of a later period, he appropriated the king's treasure for renewing the temple.

Days passed. Our hero did not return to Madura as anticipated. His rivals took advantage of this opportunity and informed the king that his Prime Minister, in whom he had so much confidence, had abused the trust and had squandered his wealth.

The king was enraged and sent an ultimatum to our hero, calling upon him to explain the delay. Manikka Vachakar now found out his mistake and represented his difficulties to his Guru who just appeared again on the scene.

On his advice and believing in the protection of God, he appeared before the king and represented that horses would arrive in a few days. On the appointed day the king, his ministers and people were anxiously expecting the arrival of the horses. Anxious moments passed. Lo! as if by magic,

an army of horses appeared before the king headed by a stalwart cavaliar. The king was satisfied. The horses were taken to the stables. But in the night, by a miracle all the horses became jackals and began to howl and roam about in the Madura streets and at last disappeared. This is the famous miracle of God, called நரியைப் பரியாக்கல் which is even now enacted during Avani Moola Utsavam in Madura.

The king became enraged again and began to chastise his minister. The whole town of Madura was flooded by the Vaiga river water. The king called upon the people to raise an embankment. An old woman was unable to do her duty. God, who acted the part of her servant, did not do his work. The King finding him guilty, whipped him on his back with his cane. But the effect of that whipping was simultaneously felt by all the people including the king himself.

Then the king discovered that it was God's miracle and that Manikka Vachakar was a famous saint in whose cause God worked these miracles. The king apologised to him and was forgiven.

Manikka Vachakar resigned his ministry, renounced the world, visited all the Siva temples singing the sublimity of God and attained Mukti at the feet of Chidambara Natarajar. The collection of his songs is known as Tiruvachakam.

This is the story of that Great Saint who is the hero of the play which I have had the honour to review.

Great men are born and die but their fame will never die. The author of the play deserves our congratulations on the choice of his plot. His exquisite style, and development of the plot interwoven with beautiful songs of the modern type add to the success of the plot.

It is with great pleasure, that I congratulate the Members of the **Madura Young Men's Amateur Association** under whose auspices the author of this play won his prize in a competition started by the said Association. The Association is really doing a useful and valuable work by creating a love for Tamil authorship and is setting an example to be followed by other kindred associations interested in the development of our Tamil Literature in various branches and the thanks of the lovers of our Tamil language are largely due to the members of the Association.

MADURA,
8-5-1919.

R. S. NARAYANASWAMI AIYER,
B. A., B. L.,
*Editor of KALVI, Madura.*

---

8

## REPORT OF THE SECRETARIES.

---

It is with much pleasure we introduce this as the successful play in the Gold Medal competition held by the Madura Young Men's Amateur Association for the best play from any one of the plots of the *Thiruvilayadals*. This was declared to be the best of the ten manuscripts received.

2. The manuscripts were examined by Messrs. R. S. Narayanaswami Ayyar, B. A, B. L., Editor of Kalvi, a Tamil monthly Magazine, P. R. Nagaswami Ayyar, B. A., B. L, P. Krishnaswami Sastri, B.A., B.L. and Pandits M. Gopalakrishna Ayyar and M. Govindasami Ayyar. This year, the examining Board was raised from 3 to 5 with a view to make the test more severe and accurate. We confess that these gentlemen had to be put to much trouble and inconvenience in the work and we take this occasion to tender our gratitude to them.

3. Our obligations are due to the Proprietors of the Desabaktan Press, Madras, who helped us in bringing out this publication in so incredibly a short time, though the press, we learn, was working at its highest pressure.

4. This introduction will be incomplete if we do not offer our thanks to the author himself who not only assigned his right for this edition (First Edition) to us but also gave us immense help in the matter of passing proofs and getting the work ready for publication which otherwise would have caused us considerable inconvenience.

5. Lastly we are glad to record here the unanimous verdict of the Board of Examiners that most of the

manuscripts received this year were excellent both in the working up of the plot and in the matter of literary merit. Places of honour were also given to *Kanthimathi* sent by Mr. R. Loganathan of Madras and *Sukakari* by G. Dandapani of Madura; **Manikka Vachakar** by Mr. V. Rangachariar, B. A., B L, of Madras was pronounced to be the best literary production but it was stated to be wanting in the working up of the plot which stood in the way of its author getting the first place.

6. We regret we are not able to print these also on account of the prohibitive cost of paper and printing but we are satisfied that these are also worthy of publication.

V. Kathirvadivel Murugaiya,
G. Subramania Ayyar.
*Honorary Secretaries.*

The Y. M. A. A.
Madura.
3—5—1919.



உ

செந்திலாண்டவன்

திருவடி துணே.

# நூன் முகம்.

---

மாணிக்க வாசகர் சமயாசாரியர் நால்வருள் ஒருவர். அப்பர், சுந்தரர், சம்பந்தர், மாணிக்க வாசகர் என்னும் சமயாசாரியர் நால்வரும் இந்தத் தமிழுலகு கடைத்தேறத் தோன்றிய அவதார புருஷர்களாவர்.

“சொற்கூவுந் தோணிபுரத் தோன்றலுமெஞ் சுந்தரனுஞ்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும்—முற்கோலி
வந்திலரே னீறெங்கே மாமறை நூ லெனெங்கே
எந்தைபிரா னஞ்செழுத்தெங் கே,”

என்னும் திருவாக்கால் இவர்களுடைய அவதார மகிமை விளங்குவது காண்க.

மாணிக்க வாசகர் பதினறு பிராயத்திற்குள் சகல கலைகளையுங் கற்று எல்லா நற்குண நற்செய்கைகளிலும் சிறந்து விளங்கியதைக் கேட்டு அரசன் அவரைத் தனக்கு முதன் மந்திரியாகக் கொண்டா னென்னும் இவர் வரலாறு இவர் ஞானச் செல்வத்துடன் அவதரித் துள்ளார் என்பதை நிலைநாட்டுகிறது.

“பெருகும் வையை தனையழைப் பிக்குமே
பிரம்ப டிக்குப் பிரான்மேனி கன்றுமே
நரியெ லாம்பரி யாக நடத்துமே
நாடி மூகை தனைப்பேசு விக்குமே
பரிவிற் பிட்டுக்கு மண்சுமப் பிக்குமே
பரம னேடெழு தக்கோவை பாடுமே
வருகும் புத்தரை வாதினில் வெல்லுமே
வாத வூரர் வழங்கிய பாடலே”

என்னும் இந்தத் திருவாக்கு, மாணிக்க வாசகர் அநேக அற்புதங் களைச் செய்து உலகத்தில் சைவமதத்தை .ஸ்தாபித்த தெய்வாம்ச சிலர் என்பதை விளக்குகின்றது.

இத்தகைய பெருமை வாய்ந்த இம்மகானின் திவ்ய சரித்தி ரத்தை நம் தமிழுலகத்திலே சைவாபிமான மேலிட்டவர்கள் புராணங் களிலே படித்தும், புராணப் பிரசங்கிகளைக் கொண்டு பிரசங்கஞ் செய்வித்துக் கேட்டும், மகான்களின் சரித்திரத்தைத் தெரிந்துகொள் வதனு லேற்படும் பயனை அடைந்து வருகிறார்கள். சரித்திரத்தைப் படித்துப் பயன் பெறுவது கல்வி பயின்றவர்க்கேயன்றி மற்றவராலா காது. கேட்டுத் தெளிவது, கேட்க.வேண்டுமென்கிற அன்பும், கேள் வியால் சிறிது அநுபவமும், பிறர் சொல்வதைக் கேட்டு வாங்கிக் கொள்வதற்கேற்ற கல்வியறிவு சிறிதும் உடையவர்க்கேயன்றி மற்ற வர்கட்கு இயலாது. படித்தவர், படியாதவர், பாலர் யாவரும் சந் தோஷமான வழியில் இப்படிப்பட்ட சரித்திரங்களைத் தெரிந்து கொண்டு பயனை அநுபவிக்கத் தக்கவழி வேறொன்றுண்டு. அது காட்சி வாயிலாகக் கண்டு களிப்பது. அதுதான் நாடகமென்பது. நாடகம் இத்துணைப் பயனை அளிக்கக் கூடியதென்பதை யுணர்ந்த நமது முன்னோர்கள் அதைப் பெரிதும் அபிமானித்து வந்திருக்கிறார் கள். ஜனங்கள் காட்சி வாயிலாகச் சரித்திரத்தைக் கண்டு தெளிந்து பயன்கொண்டு களித்து நல்வழிப்படும்படி, அரசர்கள் நாடகத்திற்கா கப் பெரும்பொருள் செலவு செய்திருக்கிறார்கள்.

ஆகையினால் காட்சி வாயிலாகக் காணும் மூன்றாவது வழியானது ஏனைய இருவழிகளையும் விடச் சிறப்புடையதும் எல்லோர்க்கும் எளி தில் பயன்தரக் கூடியதுமாகின்றது. இதனையுணர்ந்த எமது நண்பர் பிர்மஸ்ரீ துரைசாமி ஐயங்காரவர்கள், மகான் மாணிக்க வாசகருடைய திவ்ய சரித்திரத்தைத் தமிழுலகம் காட்சி வாயிலாகக்கண்டு களிக்கத் தக்கபடி அதற்குரிய இலட்சணங்களமைத்து எளிய தமிழ் நடையில் சமயோசிதமான பாட்டுகளுடன் நாடகமாக இயற்றியருளியது பெரிய புண்ய மாகுமென்பதில் ஐயமில்லை, நந்தன் சரிதத்தை பிரம்ம ஸ்ரீ

கோபாலகிருஷ்ண பாரதிகள் கீர்த்தனை ரூபமாகச் செய்தருளியது எவ்வளவு தூரம் உலகுக்குப் பயன்படுகிறதென்பதை நாமறிவோம். அச் சரித்திரத்தை அவ்வாறு அவர் செய்திலரேல் அது எல்லோராலும் கொண்டாடத்தக்க சிறப்பினை யடைந்திராதென்பது திண்ணம். அது போல் இச் சரித்திரம் உலகத்திற்கு நன்மை பயப்பதாகும்.

இதில் இன்னுமொரு விசேஷம் நாம் கவனிக்கத்தக்கதா யிருக்கிறது. மாணிக்க வாசகர் கடவுளின் உருவத்தை உலகத்தோர் காட்சி வாயிலாகக் கண்டு தரிசித்து வணங்கிப் பெரும்பேறெய்தக் கருணை கொண்டு தம்முடையதல்லாத அரசனுடைய பொருளை உபயோகித்துக் கோயில் கட்டி மகிழ்ந்தாரல்லவா? அதனையொப்ப, வைஷ்ணவராகிய நமது நண்பர் தமக்கு வேறான சைவசமயாசாரியரின் சரிதத்தை நாடகரூபமாக இயற்றியருளி யிருப்பதை நோக்கின், ஒப்புயர்வற்ற இந்த மகானின் திவ்ய சரிதத்தின் பயனை உலகம் காட்சி வாயிலாகக் கண்டு களித்துப் பயன்பெறும் பொருட்டு, இவர் தம் திருவுள்ளத்திற் கொண்ட பெருங்கருணையே இவருள்ளத்தில் சைவவைஷ்ணவ பேதத்தை யொழித்து, படித்தற்கும், நடித்தற்கும், படித்தோர் புகழ்வதற்கும் ஏற்றபடி இந்நாடகம் அமைதற்குரிய ஊக்கத்தைப் பெருக்கி யிருக்கின்றதென்பதாக நாமறிகின்றோம்.

இந்நூலாசிரியர் வேறு சில நாடகங்கள் எழுதி உலகுக்கு உபகரித்திருக்கின்றார். அவைகளைவிட இது எவ்வகையிலும் சிறந்ததாகக் காணப்படுகின்றமையான், அவைகளை யெழுதிப் பழகிய பழக்கத்தின் முதிர்ச்சிப் பயனாகுமிது. இதுபோன்ற பக்திப் பிரதானமான நாடகங்களை இந்நூலாசிரியர் இன்னும் பல எழுதவும் வெளியிடவும் சர்வவல்லமையுள்ள கடவுளின் திருவருள் பெருக அவனுடைய திருவடி மலரை முடி சூடுகின்றோம்.

இங்ஙனம்:

வரகவி திரு. அ. சுப்ரமண்ய பாரதி,

குமாரவிலாசம்
இராயப்பேட்டை
சென்னை.

---

# மாணிக்க வாசகர்.

காப்பு.

"அண்ணா மலையா னடிக்கமலஞ் சென்றிறைஞ்சும்
விண்ணோர் முடியின் மணித்தொகைவீ றற்றாற்போற்
கண்ணா ரிரவி கதிர்வந்து கார்கரப்பத்
தண்ணா ரொளிமழுங்கித் தாரகைக டாமகலப்
பெண்ணாகி யாணா யலியாய்ப் பிறங்கொளிசேர்
விண்ணாகி மண்ணாகி யித்தனையும் வேறாகிக்
கண்ணா ரமுதமுமாய் நின்றான் கழல்பாடிப்
பெண்ணேயிப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய்

---

## அங்கம் I

### முதற் காட்சி.

இடம்:—மதுரைமாநகரத்தில் அரிமருத்தன பாண்டியனது அரண்மனையின் குதிரைச்சாலை.

காலம்:—மாலை.

[குதிரைப்படைத் தலைவன் வரகுணன் குதிரைகளைப் பார்த்துக் கொண்டு வருகின்றான்;. அப்போது யானைப்படைத் தலைவன் குண ஸுந்தரன் வேறொரு புறமாகவந்து முன்னவனைச் சந்திக்கின்றான்.]

வர:—(ஆச்சரியத்தோடு) ஆகா! அப்படியா! குணஸுந்தரரா? வர வேண்டும்; வரவேண்டும்.

குண:—(புன்சிரிப்போடு) வருகிறேன். (இருவரும் ஒருவரை யொரு வர் தோள்மாற்றி ஆலிங்கனம் செய்து கொள்ளுகின்றனர்.)

வர:—வரவு மிகவும் அருமையா யிருக்கிறது! ஏது இவ்வளவு தூரம் தயவு செய்தது?

குண:—(புன்சிரிப்போடு) அருமையான நண்பரைப் பார்க்க அருமையாகத்தானே வர வேண்டும். வேறொன்றும் விசேஷமில்லை. என்னுடைய வேலை இன்றைய தினம் சீக்கிரமாக முடிந்து போயிற்று. உம்மைப் பார்த்து நிரம்ப நாட்களாயிற்றேயென்று இப்படி வந்தேன். எப்போதும் இருப்பதைப்போல அவ்வளவு குதிரைகள் இங்கு காணப்படாமையால், நீர் எங்கேயாயினும் யுத்தத்திற்குப் போயிருப்பீரோ வென்று சந்தேகித்தேன்.

வர:—மிகவும் நன்றாயிருக்கிறதே! பருப்பில்லாமற் கலியாணமுண்டோ! நீங்களெல்லோரும் வராமல் நான் மாத்திரம் எந்த யுத்தத்திற்குப் போகப்போகிறேன்! என்? குதிரைகள்தாம் இருக்கின்றனவே! எங்கே போய்விட்டன? நீர் கவனித்துப் பார்க்கவில்லைபோ லிருக்கிறது.

குண:—(சிரித்துக்கொண்டு) அடாடா! குதிரைகளா இவைகள்! கழுதைகளென்றல்லவா நினைத்தேன். ஆகா! ஒவ்வொன்றும் மாதம் காதவழி மாயமாய்ப் பறக்கும்போ லிருக்கிறதே! இவைகளை வைத்துக்கொண்டு பகையரசரை நிச்சயமாய் வென்றுவிடலாம்.

வர:—அந்த விபரீதத்தை என்னவென்று சொல்லுவேன்! நல்ல குதிரைகள் யாவும் திடீரென்று நோய்கொண்டு மரித்தன. கிழக் குதிரைகளும், நோய்கொண்ட சில குதிரைகளுமே மிகுதியிருக்கின்றன. இதைப்பற்றி முதல் மந்திரியினிடத்தில் தெரிவித்திருக்கிறேன்; அவர் நல்ல குதிரைகளாகப் பார்த்து அதி சீக்கிரத்தில் வாங்க ஏற்பாடு செய்வார்.

குண:—வாதவூரர்தானே! உடனே ஏற்பாடு செய்துவிட்டு மறுவேலை பார்ப்பார். நம்முடைய அரசனுக்குக் குதிரைகள் அமைந்திருப்பதைப்போலத்தான் முதன் மந்திரியும் வந்து வாய்த்திருக்

கிறார். மந்திரி வேலைக்குத் தேடித் தேடிப் பார்த்து இந்தப் பிராம்மணனைக் கண்டு பிடித்தாரே! அதுதான் ஸாமர்த்தியம்!

வர:—(கன்னங்களில் அடித்துக்கொண்டு) அடாடா! அப்படிப் பேச வேண்டாம். பாவம்! பாவம்! அந்த மகாநுபாவரை இப்படித் தூஷித்தால் நாவழுகிப் போய்விடும். அந்தணரென்பது அவருக்கே தகும். "அந்தண ரென்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும், செந்தண்மை பூண்டொழுக லால்" என்ற அருள் வாக்கின்படி, கன்றிற்கிரங்குந் தாயைப்போல மன்னுயிரைத் தம்முயிரினும் அரிதாக ஓம்பிப் பாதுகாக்கும் புண்ணியமூர்த்தியல்லரோ அவர்! எல்லாம் வல்ல சச்சிதாநந்தப் பொருளையே அல்லும் பகலும் அநவரதமும் நினைத்து நினைத்துருகி, சிவநாமாமிருதத்தையே இடைவிடாமல் மனனஞ்செய்து பருகி, அதையே தமது உணவாகக் கொண்டிருக்கும் அந்தப் பிராம்மணோத்தமரை இவ்விதம் தூற்றுவது கொடிய பாவம்.

குண:—நண்பரே! அவரிடத்தில் நீர் சொல்லும் மகிமை மாத்திரந் தானா இருக்கிறது? இரண்டாள் போஜனத்தை அவர் ஒருவரே உண்டு விடுவார்; நன்றாய்ப் பாடுவார்; எழுந்திருக்காமல் இரவெல்லாம் குறட்டைவிட்டுத் தூங்குவார்; கால்களால் நடப்பார். அவருக்கு இரண்டு கண்களுண்டு. அவர் இறந்தாற் பிழைக்கமாட்டார்.

வர:—நண்பரே! என்ன இப்படிப் பேசுகிறீர்?

குண:—நீர் சொல்லும் பெருமையெல்லாம் அவரிடத்தி லிருக்கலாம். அதைப்பற்றி நான் ஒன்றும் இகழ்வாகப் பேசவில்லை. தலைமை மந்திரி உத்தியோகத்திற்கும் அந்த நற்குணத்திற்கும் என்ன சம்பந்தம்? அவர் செய்யும் உத்தியோகத்திற்குத் தேவையான யோக்கியதையும் சிறப்பியல்புகளு மன்றோ அவரிடம் இருத்தல் வேண்டும்.

"நல்லவுந் தீயவு நாடி நாயகற்
சொல்லலில் மருத்தவ ளியல்பி னெண்ணுவார்

ஒல்லைவந் துறுவன வுற்ற பெற்றியின்
தொல்லைநல் வினையென வுதவுஞ் சூழ்ச்சியார்''

என்றபடி, நாடு, நகரம், குடிகள், அரசன் முதலியோருக்கு எவ்வித இடுக்கணும் ஸம்பவியாமல் எல்லோருடைய நன்மையி லேயும் கண்ணுங் கருத்துமா யிருப்பவனன்றோ அமைச்சன். நாளையதினம் பகையரசன் நம்மீது படையெடுத்து வந்தால், இந்த சிவப் பைத்தியம்கொண்ட பிராம்மணர் என்ன செய் வார்? நால்வகைப் படைகளிற் சிறந்த குதிரைப்படை நம்மிட மில்லையே யென்னும் கவலையைக் கொள்ளாத மந்திரி இந்த நாட் டையும், நம்மையும், மன்னனையும் எப்படிக் காப்பாற்றப்போகி ருர்? அரசனும், இவரை நம்பி, பாதுகாப்பில்லாமலிருக்கி ருரே! இவர் கப்பலைக் கவிழ்த்து விடுவார்போ லிருக்கிறதே.

வர:—அடாடா! என்ன நீர்கூட இப்படித் தாறுமாறுய்ப்பேச ஆரம் பித்து விட்டீரே! 'அவனன்றியோ ரணுவு மசையா' தென் பதை நீர் கேள்விப்பட்டதில்லையா? நம்முடைய வேந்தனுலும், அமைச்சனுலும், நால்வகைப் படைகளாலுமே நமது தேசம், துன்பமும், அச்சமுமின்றிசௌக்கியமாக இருக்கிற தென்பது உம்முடைய எண்ணமோ? எங்கே தானமும், தருமமும், தவ மும் பிழையாமல் நடைபெறுகின்றனவோ, அங்கே செல்வமும், வல்லமையும், சுகமும், ஆநந்தமும் தாண்டவமாடுகின்றன. சிவநாமோச் சாடனமே பகைவரை நடுக்குவித்தோட்டும் வச் சிராயுதமன்ருே! நாட்டிற்கும், மனிதருக்கும் ஈசுவர பக்தி யைக் காட்டினும் சிறந்த உறுதியும், பலமும் வேறுண்டோ? இந்த உலகத்திலுள்ள அரசர்கள் யாவரும் ஒன்றுகூடித் திர ண்டு படை யெடுத்துவந்த போதிலும், இந்தப் புண்ணிய புரு ஷர் "சம்போ! மகாதேவா" என்ற அந்த ஸர்வவிக்னநிவா ரண மந்திரத்தை உச்சரிப்பாராளுல் யாவரும் பஞ்சுபஞ்சாய்ப் பறந்துபோய் விடுவார்களே! அத்தகைய வேதமூர்த்தியாகிய வாதவூர் ஸ்வாமிகளைப்பற்றி இனிமேல் இவ்விதம் அடாமொழி

களைச் சொன்னால் என்மனம் அவற்றைக் கேட்க சகியாது. நம்முடைய மன்னனும், அவனுடைய முன்னோர்களும், நாட்டினரும் செய்த புண்ணிய பலத்தினாலன்றோ அவர் நமக்குத் தலைமை அமாத்தியராக அமைந்திருக்கிறார்.

குண:—(ஏளனமாக) ஆகா! நல்ல ஸுலபமான வழியைக் கண்டு பிடித்தீர். இனி நமக்கெல்லாம் அரண்மனையில் வேலையே யில்லை. ஒவ்வொரு மாதமும் ஆயிரக்கணக்கில் பணச் செலவு செய்து, யானை, குதிரை, காலாள், தேர் முதலியவற்றைக் காப்பாற்ற வேண்டுமென்னும் அவசியமேயில்லை. வாதவூராருடைய சிவநாம மந்திரமே போதும். அது பொருட் செலவில்லாத நல்ல படைதான். இராஜனிடம் உடனே போய்ச்சொல்லி அவனுக்குப் பெருத்த இலாபம் உண்டாக்கி வைப்போம் வாரும். எத்தனையோ அரசர், நிபுணர்களான எத்தனையோ மந்திரிகள் முதலியோருக்குத் தெரியாத இந்த இரகஸியத்தை நீர் கண்டுபிடித்து விட்டீர்! போமையா போம்! சிவனாவது நமக்காக வந்து உதவி செய்வதாவது! வாதவூரரின் பைத்தியம் உம்மையும் பலமாய்ப் பிடித்துக்கொண்டாற் போலிருக்கிறது! 'தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன், மெய் வருத்தக் கூலி தரு'மென்னும் கொள்கை உமக்குத் தெரியாதோ? தெய்வம் நமக்கு எவ்வளவு தூரம் உதவிசெய்யும்? நாம் ஒரு விஷயத்தில் முயற்சி செய்கிறதாக வைத்துக்கொள்வோம். அவ்விஷயத்தில் நம்முடைய ஊழ்வலியும் அநுகூலமாயிருந்தால், கடவுள், நாம் எதிர்பார்க்கும் பலனைக் காட்டிலும் அதிகமாக நமக்குக் கொடுப்பார். நம்முடைய ஊழ்வலி விரோதமானால், நாம் முயற்சித்த வரையில் அதன் கூலியாயினும் அவசியம் கிடைக்குமென்பதற்குத் தடையில்லை. நாம் முயற்சி செய்தால் மாத்திரம் பலன் கிடைக்குமன்றி சும்மாவிருந்தால், ஒன்றுங் கிடைக்காது. ஒருவன் ஜாதகத்தைப் பார்த்துத் தனக்கு 60 வயது நிச்சயமாயிருக்கிறதென்று அறிந்து கொள்

ளுகிறதாக வைத்துக்கொள்வோம். அவன் உடனே ஒரு தீர்மானம் செய்து கொள்ளுகிறன். "நான் 60 வயது வரையில் எவ்வகையாலும் இறக்கமாட்டேன். ஒரு ஆயுதமும் என்னைக் கொல்ல வல்லமையற்றது. நான் யாதொரு முயற்சியும் செய்ய வேண்டுவதில்லை. வயிற்றுக்காகப் பொருள் தேடவேண்டுமென்னும் அவசியமில்லை. ஆகாரமே கொள்ள வேண்டுவதில்லை" என்று தீர்மானம் செய்துகொண்டு அவன் ஒரு கத்தியை எடுத்துத் தன் கழுத்தை யறுத்துக்கொள்கிறன்; அல்லது, ஆகாரமே கொள்ளாமற் பலநாட்கள் வரையிலிருக்கிறன். அவனுடைய உயிர் நிற்குமா? ஜாதகப்படி அவனுக்களித்த 60 வருஷ காலம் வரையில், கடவுள் அவனைக் காப்பாற்ற வேண்டாமாவென்று கேள்வி கேட்டால் அது நியாயமாகுமோ? இதெல்லாம் பைத்தியமே யொழிய வேறல்ல; ஒருநாளும் நடக்காத ஸங்கதி. இது மண் குதிரையை நம்பி ஆற்றிலிறங்கினதைப்போ லிருக்கிறது. என்னவோ நம்முடைய தேசத்திற்கு அனர்த்த காலந்தான் வந்திருக்கிறது. எந்த நிமிஷத்தில் எந்த விரோதி வரப்போகிருனே; நம்முடைய அரசன் தலைக்குக் கல் வரப்போகிறதோ தெரியவில்லை. கோயிலுக்குப் பூஜை, நிவேதனம், திருப்பணி முதலியவற்றை நடத்துவதனுலும் அதிதிகளுக்கு உணவளித்தலினுலும் மூக்கைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருத்தலினுலும் காரியம் ஒருநாளும் பலியாது. இராஜாங்கத்தில் கவலையற்ற மனிதன் இருப்பதும் ஒன்றே இல்லாமற் போவதும் ஒன்றே.

வர:—ஐயா! நண்பரே! அப்படியா நினைக்கிறீர்? இதெல்லாம் நம்முடைய அற்ப அறிவினுல் ஏற்படும் அவநம்பிக்கையே யொழிய வேறில்லை. கடவுளின்மீது மனேவுறுதி வைத்து, அவனையே நம்பிச் சும்மாயிருக்க உமது மனம் துணிவடையவில்லை. எத்தனையோ கோடி அண்டபிண்ட சராசரங்களைப் படைத்துக் காத்தழிக்கும் வல்லமையுடைய ஈசுவரனே கதியென்று அவன்மீது

நம்பிக்கைவைக்க நீர் பின்வாங்கினால், அது உம்முடைய பிழையே யன்றி, அதற்கு ஈசுவரன் எப்படிப் பாத்திரனாவான். நாம் நம்மைக் காப்பாற்றிக் கொள்ள முயற்சிசெய்ய வேண்டுமென்றீரே; நாம் நம்முடைய தாயின் வயிற்றி லிருந்தோமே. அப்போது யாரையா நம்மைக் காப்பாற்றினவன்? நாம் பிறந்த பிறகு பல்லில்லாக் குழந்தையா யிருந்தோமே அப் பொழுது நமக்குத் தாயின் தேகத்தில் மிருதுவான ஓரிடத்திலிருந்து பா லுண்டாக்கி எளிதில் நம்மை யுண்பித்தவன் யாரையா? அது நிற்க, உலகத்தை நீத்த துறவிகள் என்ன செய்கிறார்கள் பார்த்தீரா? கடவுளையே நம்பி, அவன்மீதே தியானமாக இருந்து, ஊணுறக்க மற்று ஹடயோகம் செய்கிறார்களே; அதனால் அவர்கள் ஏனையா மரிப்பதில்லை? அவர்களுடைய தேகம் பொன்மயமாகப் பழுப்பதோடு, அவர்கள் எத்தனையோ நூற்றாண்டுகள் உயிருடனிருப்பதைக் காண்கிறோமே. கடவுளையே நம்பித் தம்முடலைக் கவனியாமல்விடும் அவர்களது தேகத்திற்கும், ஊட்டி வளர்த்துச் சிராட்டிப் பாராட்டிக் காப்பாற்றிப்பஞ்சுமெத்தைகளிற் படுக்கவைக்கும் நம்முடைய தேகத்திற்கும் வித்தியாசமென்ன? நம்முடையதேகம் அற்பகாலத்தில் அழிந்து போகிறதாயும் எண்ணிக்கையற்ற நோய்களுக் கிருப்பிடமானதாயு மிருக்கிறது. கடவுளின்மீது நம்பிக்கை வைப்பதற்கும், நம்முடைய முயற்சியின்மீது நம்பிக்கை வைப்பதற்குமுள்ள பேதத்தைப் பார்த்திரா? அது நிற்க, வாதவூர் ஸ்வாமிகள் இராஜாங்க விஷயத்தைக் கவனிப்பதே இல்லையென்று நினைக்கிறீர்? அது தவறு; பிறபுருஷனை விரும்பிய ஒரு ஸ்திரீ, தன் மனதையும் ஆசையையும் கள்ள நாயகன்மீது செலுத்தியிருந்த போதிலும், தன் கணவனுடைய காரியங்களை யாதொரு பழுதுமின்றிச் செய்வதைப்போல, அவர் கருணாநிதியான செஞ்சடையண்ணலின்மீதே தமது நினைவு முழுதையுஞ் செலுத்தியிருந்த போதிலும், இராஜாங்க விஷயங்களையும் யாதொரு குறைவுமின்றியே பார்த்துவருகிறார். தபவுசெய்து இனி அந்தப் புண்ணி

யாத்மாவை இகழ்வாகப் பேசவேண்டாம். நான் சொன்னதை அவர் ஒருவேளை மறந்திருக்கலாம். திரும்பவும் நான் இராஜ ஸபைக்குப்போய் நினைவூட்டுகிறேன்.

குண :—ஆம். அப்படியே செய்யும். நாம் சிவ மந்திரத்தையே நம்பி சேனையில்லாம லிருக்கக் கூடாது. ஏனென்றால் நம்முடைய பகையரசனும் சிவ மந்திரத்தையே நம்புகிறவனாக் இருக்கலாம். அதோடு அவன் சேனைகளையும் ஏராளமாக வைத்திருக்கலாம். அப்போது பலாபலம் சிவ மந்திரத்தினால் தெரியாது. படைக ளின் வல்லமையாற்றான் வெளியாகும். அவன் வாதவூரரின் அநுமதி பெறாமலே தேசத்திற்குள்ளும், அரண்மனைக்குள்ளும் நுழைந்துவிடுவான். ஜாக்கிரதை; நேரமாகிறது; நான் போகி றேன்.

வர :—நமஸ்காரம்.; போய்வாரும்.

[இருவரும் இருபுறங்களில் போகிறார்கள்.]

---

## இரண்டாவது காட்சி.

இடம்:—பாண்டியனது கொலுமண்டபம்.

காலம்:—மறுநாள் பகல்.

[இராஜனும், அவனது பட்ட மகிஷியும் சிம்மாசனங்களில் உட்கார்ந்திருக்கின்றனர். மந்திரிமார், தண்டநாயகன், குதிரை நாயகன், கட்டியக்காரர், சேவகர் முதலியோர் நிற்கின்றார்கள். இருபுறங்களி லும் இரண்டு பணிப்பெண்கள் சாமரை வீசுகின்றனர்.]

சேவகன் :—(அரசனை வணங்கி) மகாராஜா! தாசிகள் நாட்டியம் செய்யக் காத்திருக்கிறார்கள்.

அரசன் :—சரி! நடக்கட்டும்.

[சேவகன் அப்பால் போகிறான். நாட்டிய மாதர், பாட்டுடன் ஆடிக்கொண்டு வருகின்றனர்.]

(பெகி ஆவலெ நாவலெ பாவே, மேரே லாகோபியாரேபை டாருவா—என்ற இந்துஸ்தானிப் பாட்டின் வர்ணமெட்டு.)

புவிமீதுயர் பொன்னகர் வேந்தே! பதம்
போற்றிப் பணிந்தேமெம் மன்னவா ! (பு)
பொங்கரவணிந்தோன் பொய்க்கரி யெறிந்தோன்
தன்குல மணியே !—தலைவனே !
நிறை தப்பாத நின் செங்கோலின் மேன்மை
முறை செப்பாதவரேது தூயனே ! (பு)

[வணங்குகின்றனர்.]

அரசன் :—(புன்சிரிப்போடு) பலே! நிரம்ப நன்றாயிருக்கிறது!

நாட்டிய மாதர் :—(திரும்பவும் பாடியாடுதல்.)

(அச்சமொரி லர்கீஸே கேனுஸேனு கேனுவா
என்ற இந்துஸ்தானிப் பாட்டின் வர்ணமெட்டு.)

தென்னவனே நீயேயெம் தேவனுவை நாதனே !
நாதனே—நீயே நாதனே. (தெ)

(1) மன்னு! நின்றனை - யுன்னுத வேனை
மகிபோனே ! யொருநாளு - மிலதாகுமே (தெ)
(2) சத்தேனு நீயிலாமல்-யாமென் செய்வோமே ?
தாயாகும் நீயே நற் றாயவனே. (தெ)

[நடனமாதர் அரசனை வணங்கிவிட்டு அப்பால் போய்விடுகின்றனர்.]

சேவகன் :—மகாராஜா ! முதல் மந்திரியின் ஸவாரி வந்திருக்கிறது.

அரசன் :—ஓகோ ! வரட்டும். ஸந்தோஷம் !

[வாதவூரர் அடியில் வருமாறு ஈசுவரனைத் துதித்த வண்ணம் நுழைகிறார்.]

(பாதி மதி நதி போது மணிசடை - என்ற
திருப்புகழின் சந்தம்)

போதவிரிகுழல் மாதரமுவிய பூவின்விழியினன் முதலானோர்
போத ! நினையொரு காலுமறிகில ரேழையுணருத லெளிதாமோ,

மா—. சிவைவிழை நாத! மதனழி மாழை பொழிதரு பெருமானே!
வாதைநிறைபவ வேலைவிலகிட வாகுமடியிணை தருவாயே.
சூதுபுரியசு ராதிசெகுகுக நாதனுதவிய விடையோனே!
சோமனொளிர்சிர வாமமுதுசிவ காமிமனதுறை குழகோனே!
போதமுலவினி யேனுமுனதருள் நீழலுறவருள் புரிநீதா!
பூவை மலைமகள் பாகமுறைதரு போதமுரைசிவ குருநாதா!

அரசன்:—(எழுந்து) ஸ்வாமி! நமஸ்காரம்.

வாத:—தீர்க்காயுஷ்மான் பவா!

இராணி:—ஸ்வாமி! நமஸ்காரம்.

வாத:—தீர்க்க ஸுமங்கலீபவா!

மற்றவர்:—ஸ்வாமிகளே! நமஸ்காரம்.

வாத:—ஸுகீபவா!

அரசன்:—ஸ்வாமி! ஆஸனத்தில் எழுந்தருளவேண்டும்.

வாத:—(உட்கார்ந்தவண்ணம்) எல்லோரும் உட்காருங்கள்.

[உட்காருகிறார்கள்.]

அரசன்:—ஸ்வாமி! இராஜாங்கத்தில் விசேஷம் யாதேனும் உண்டா?

வாத:—மகாராஜா! நமக்கும் சேரராஜனுக்குமுள்ள எல்லைத் தகரார் விஷயத்தில் நாம் அவனுக்கு அனுப்பிய நிருபத்திற்கு மறுமொழி கிடைத்திருக்கிறது.

அரசன்:—(புன்சிரிப்போடு) அப்படியா! எப்போது கிடைத்தது?

வாத:—இன்று காலையில்.

அரசன்:—என்ன எழுதியிருக்கிறான்?

வாத:—அவன் வைகையாற்றை எல்லையாக ஒப்புக் கொள்ளமாட்டானும். ஆற்றிற்கு இப்பாலுள்ள ஐந்து ஊர்கள் தன்னுடையவையென்றும், அவற்றிலிருப்போர் தனக்கே வரி செலுத்தி வருவதாலும், அவர்கள் சேர பாஷை பேசுவதாலும் தன் பாத்திய

தையை ஸ்தாபிக்க வேறு சாட்சியம் தேவையில்லை யென்றும் எழுதியிருக்கிறான்.

அரசன்:—போரில் நம்முடைய முன்னோர் அவ்வூர்களை வென்றதைப் பற்றி எழுதியிருந்தோமே; அதற்கு ஏதாகிலும் சமாதானம் தெரிவித்திருக்கிறானா?

வாத:—அவன் அதைப்பற்றியே ஒன்றும் எழுதவில்லை.

அரசன்:—(கோபத்தோடு) அப்படியா! நிரம்பவும் புத்திமானாக இருக்கிறான்! யுத்தத்தில் அடி பட்டு நீண்ட காலமாயிற்றல்லவா! வடுக்கள் ஆறிப்போய்விட்டன வாகையால் மறந்துவிட்டான்; இது நன்மைக்குக் காலமில்லை. மரியாதையாகக் கேட்டால் எவனும் கொடுப்பதில்லை; தண்டப்பிரயோகம் செய்தாலன்றி ஒழுங்கிற்கு வருவதில்லை. அவன் சுலபத்தில் ஊர்களை விடமாட்டான்போ லிருக்கிறது. சரி; தண்ட நாயகா!

தண்ட:—(வணங்கி) மகாராஜா!

அரசன்:—(கோபத்தோடு) நம்முடைய படைகளைத் திரட்டிச் சென்று ஐந்து கிராமங்களையும் உடனே கைப்பற்றிக்கொண்டு அவ்விஷயத்தை நமக்கு அறிவிக்கவேண்டும்.

வாத:—மகாராஜனே! பதறவேண்டாம்.

(விருத்தம் : இராகம்-தோடி.)

மன்னவா! கயிலை யேந்தல் மாபினி லுதித்த மேலோய்!
சொன்னவா புரியு முன்னர்த் தன்னலற் றிறுதி யாக
நின்னவா இனைய தென்ன நிருபமொன் றனுப்பி யாய்ந்து
தென்னவா! பொருதல் நீதி. சிறிதுநீர் பொறுப்பீர் கோவே!

கடைசிமுறையாக நாம் இன்னொரு நிருபம் எழுதிப்பார்ப்போம். அதைப் பெற்ற ஒரு வாரத்திற்குள் நம்முடைய ஊர்களை நம்மிடம் ஒப்புவிக்காவிட்டால் போருக்கு வரவேண்டுமென எழுதியனுப்புவோம். அதற்கும் அவன் இணங்காவிடில், பிறகு நாம் போருக்குப் புறப்படலாம். பகைவனுக்குத் தெரியாமல் யுத்

தத்திற்குச் செல்வது தருமப் போராகாது. வேறுவிதத்தில் காரியம் பலியாவிடில் மாத்திரம் கடைசி உபாயமாக தண்டப் பிரயோகம் செய்யவேண்டுமேயன்றி, அநாவசியமாக இருதிறத் தாரின் சேனைகளையும் மாய்த்து ஈசுவரனால் சிருஷ்டிக்கப் பட்ட ஆன்மாக்களை அழிப்பது பெருத்த குற்றமும் பாவமுமாகும். ஆகையால் கொஞ்சம் பொறுமையைக்கொள்ள வேண்டுகிறேன்.

அரசன்:—ஸ்வாமி! தங்கள் புத்திமதிப்படியே ஆகட்டும். தண்ட நாயகா! நீ அதற்குள் நம்முடைய சேனைகள் போருக்கு எழு வதற்குத் தகுந்த நன்னிலைமையி லிருக்கின்றனவாவென்று சரி பார்த்துத் தயாரித்து வைத்துக்கொள்.

குதிரைப் படைத்தலைவன்:—(வணங்கி) இராஜனே! ஒரு விண்ணப் பம்.

அரசன்:—அடே! வரகுண! என்ன விசேஷம்?

வர:—நம்முடைய குதிரைகள் யாவும் திடீரென்று நோய் கொண்ட தாக நான் முன்னொருமுறை மனுச்செய்து கொண்டது நினை விருக்கலாம். முதல்தரமான சிறந்த புரவிகள் யாவும் இறந்து போய் விட்டன. இப்போது இருப்பவை வயது முதிர்ந்தன வாயும், நோய் கொண்டனவாயு மிருக்கின்றன. யுத்தத்திற்கு ஒன்றேனும் பயன்படாது.

அரசன்:—அப்படியா! என்ன ஆச்சரியம்! ஆயிரக் கணக்கிலிருந்த குதிரைகள் அத்தனையும் எப்படி இறந்தன?

வர:—ஸ்வாமி! நான் என்னவென்று சொல்வேன்! யாவும் நோய் கொண்டு ஒரு வாரத்திற்குள் இறந்து போய்விட்டன. எவ்வித மான வைத்தியஞ் செய்தும் பயன்படவில்லை.

அர:—வாதவூர் ஸ்வாமிகளே! இந்த அதிசயத்தைக் கேட்டீர் களா?

(காவடிச்சிந்து: பாளைவாய் கமுகில் வந்தார் — என்ற பாட்டின் சந்தம்).

அரசன்:—

ஓதுவர் குலக்கொழுந்தாய் வாதவூர் விளங்கவந்தோய்!
சோதனை இதுவோ வென்ன மாயமோ! இந்தத்
நீதினை யடைந்த தென்ன நியாயமோ!

வாத:—

மாதுவாழ் மணங்கமழ்ந்த போதுசூழ் புனல்மலிந்த
மாமதுரை தாழநின்ற அண்ணலே!
நிமையை யறியவுற்றே னின்னலே.

அரசன்:—

மோதுபோர் விளைந்தகாலை மீதுபாய் பரியின்சாலை
முற்றிலும் வெறுமையாதல் விந்தையே! அது
முற்றிட வுபாயமென்ன எந்தையே!

வாத:—

வாதையேன்! விடுத்திடுவீர் நாதனே கொடுத்திடுவோர்
வாடிநீர் வருந்தலெதற் கையனே! பரி
கோடியேனுங் கொள்ளலாகும் துய்யனே!

அரசன்:—ஸ்வாமி! அரசனுக்குக் குதிரைப்படை யில்லாவிடில் யாதொரு பெருமையும், வல்லமையுமில்லை. திடீரென இவ்வித விபத்து நமக்குச் சம்பவித்ததன் காரணம் தெரியவில்லையே!

வாத:—மகாராஜனே! தேவாலயம் பிரம்மாலபம் முதலியவற்றில் பூஜை அன்னதானம் முதலியவை ஒழுங்காக நடத்தும் விஷயத்தில் நான் நேரில் எவ்வளவோ கவனித்துப் பாடுபட்டு வருகிறேன். அப்படி யிருந்தும் ஏதோ தவறு நடந்திருக்கிறது. அதனாலேயே இந்தத்திமை சம்பவித்திருக்க வேண்டும்.

அரசன்:—ஸ்வாமி! இதைப்பற்றி நானும் கவனித்து விசாரணை செய்கிறேன். அதோடு, நாம் இப்போது முக்கியமாகச் செய்ய வேண்டுவதென்ன வென்றால் கிழக்குக் கடற்கரையில் கப்பல்களில் வந்திறங்கும் குதிரைகளில் நல்லவையாகப் பார்த்து நமக்குத் தேவையானவற்றை வாங்கவேண்டும். அதைத் திறமையோடு செய்யக்கூடியவர் வேறொருவருமிலர். அதற்கு நீங்

களே நேரில் போகவேண்டும். நம்முடைய பொக்கிஷ சாலையைத் திறந்து தேவையான பொருளை எடுத்துக்கொள்ளுங்கள். சிரமங் கொடுத்ததற்கு மன்னிக்கவேண்டும். (நமஸ்கரிக்கிறான்.)

வாத :—மகாராஜா! உம்முடைய சித்தப்படியே ஆகட்டும்.

அரசன் :—நீங்கள் இன்றைக்கே புறப்படவேண்டும்.

வாத :—சரி! இச்சைப்படி செய்கிறேன் (எழுந்து) நான் உத்தரவு பெற்றுக்கொள்ளுகிறேன்.

அரசன் :—(எழுந்து) நமஸ்காரம்!

வாத ;—மங்களானி பவந்து.

[வாதவூரர் போகிறார்.]

---

## மூன்றாவது காட்சி.

இடம்:—திருப்பெருந்துறைக் கோவிலுக்கு சமீபம்.
காலம்:—மறுநாள்காலை.

[வாதவூரர் சிவநாமஸ்மரணை செய்தவண்ணம் வருகிறார்.]

(இராகம்-செஞ்சுருட்டி; தாளம்-ரூபகம்.)

பல்லவி.

சிவலோக நாதனை யென்று சேவித்துணுகுவேனோ?

அநுபல்லவி.

பவலோக மாகுமிதனைப்
பாவி யொழிக்க வருளாய் சம்போ!

சரணங்கள்.

(1) மாயைக் கடலிலுழன்றேனதில்
ஆசைப்படகி லலைந்தேன்;
தாயைப்பிரிந்த கன்றாயினேன்;
தானுவே யெனையாளும்பானும்.　(சிவ)

(2) நினையே நினைத்தழுவேன்றனை
நீயா தொழிப்பாயோ?

எனையாட்கொள்ள வருவாயீசா !
இனியபதத்தைத் தருவாய் சம்போ ! (சிவ)

சம்போ ! மகாதேவா ! சங்கரா ! என்னப்பனே ! உன்னை நினையாத நாளும் நாளாமோ ! உன்னுடைய தேனூறும் நாமத்தை உச்சரியாத நாவும், உன் பணிவிடைக்காகாத தேகமும் பரிசுத்தமாமோ ! ஆகா ! ஸதாகாலமும் உன்னை ஸ்தோத்திரம் செய்வதைக் காட்டிலும் சிறந்த பேரின்பம் எதிலிருக்கிறது! எத்தனைமுறை துதித்தாலும் தெவிட்டாத அமிழ்தல்லவோ உன்னமம்! ஏ! ஆநந்தக்கடலே! நினைக்க நினைக்க மதுவூறும் ஆநந்தமயமே! ஏ! ஸுகவாரியே! இந்த தேகம் உனக்குப் பணிவிடை செய்யாவிடில் இதற்கு வேறு என்ன ஸார்த்தகமிருக்கிறது! உலகிலுள்ள பொருட்களெல்லாம் உன் திருப்பணிக்கும், உன் அடியார்களை உண்பிப்பதற்குமின்றி, வேறு என்ன பெருமையை யடையப்போகின்றன. உலகங்களை யெல்லாம் படைத்துக் காத்தழிக்கும் ஒப்புயர்வற்ற ஜடாமகுடதாரியாகிய சக்கிரவர்த்திக்குத் தொண்டுசெய்வதை மறந்து நான் கேவலம் மானிடனுகிய அரசனுக்கு மந்திரித்தொழில் புரிவதில் இதுகாறும் என் வாழ்நாட்களை வீழ் நாட்களாக்கினேனே! ஆகா ! என்ன என்னுடைய மடமை ! எத்தகைய பாவ மூட்டையைத் தேடிக்கொண்டேன்! இதுவரை நான் வீணுக்கியது போதும். இனிமேலாகிலும் இந்த உலகத்து அரசனையும், இதனுடைய விஷயங்களையும் மறந்து பராபர வஸ்துவாகிய பரம்பொருளின் மீதே முழு மனதையும் செலுத்திக் கடைத்தேற வழிதேடுகிறேன். நான் ஒட்டகங்களின் மீது ஏற்றிக் கொணர்ந்த பொருள்கள் யாவற்றையும் சிவன் பொருட்டாய் விநியோகம் செய்து விடுகிறேன். நான் மதுரையிலிருந்து புறப்படுமுன் ஸோமஸுந்தரக் கடவுளின் திருவாலயத்திற்குச் சென்று பொற்றாமரைத் தடாகத்தில் ஸ்நானஞ்செய்து, அக்கரையிலுள்ள சித்தி விநாயக ஸ்வாமியை வணங்கிக்கொண்டு, கருணை நாயகியான அங்கயற்கண்ணி யெம்பிராட்டியின் தாமரைத்தாளில் வணங்கிய பின்பு

வருணனுடைய வயிற்று நோயைத் தீர்த்தாண்ட நீலகண்ட ஸ்வாமியின் ஸ்ரீ பாதங்களைப் பணிந்து நின்று "ஸ்வாமீ! என் குறையை முடித்தருள வேண்டும். அடியேன் இப்போது கொண்டு செல்லும் பொருட்களெல்லாம் உமக்கும் உம்முடைய அடியார்க்கும் பயனாகச் செய்து என்னை ஆட்கொள்ள வேண்டு" மென்று ஸ்தோத்திரஞ் செய்தேன். அப்போது ஒரு குருக்கள் என் முன்னே தோன்றி விபூதி கொடுத்து மறைந்தார். ஈசுவரனுடைய அநுமதி கிடைத்ததென்பதற்கு அதுவே நல்ல அறிகுறியாயிற்று. இனி நான் இந்த ஊரில் அவருடைய திருக்கட்டளையை நிறைவேற்றுகிறேன். இதோ ஈசனது திருவாலயம் காணப்படுகிறது. இதை அணுக அணுக என் மனதில் ஒருவித ஆநந்தம் பொங்கி யெழுகிறது. என் மனமும் தேகமும் உருகுகின்றன. ஆலயத்திற்குட்போய் எனையாண்டவனைத் தரிசனஞ் செய்கிறேன்.

[கோவிலுக்குள் போய் சன்னிதிக்கு முன்வருகிறார்.]

ஹர ஹர! சம்போ! மகாதேவா! (சாஷ்டாங்கமாக நமஸ்காரம்செய்து எழுந்து கன்னத்தில் அடித்துக் கொள்ளுகிறார்.) என்ன தேஜோமயம்! என்ன பிரம்மாநந்தம்!

தேவாரம்.

" ஊனா யுயிரா யுணர்வா யென்னுட் கலந்து
தேனா யமுதமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்
வானோ ரறியா வழியெமக்குத் தந்தருளுந்
தேனார் மலர்க்கொன்றைச் சேவகனார் சீரொளிசே
ரானா வறிவா யளவிறந்த பல்லுயிர்க்குங்
கோனாகி நின்றவா கூறுதுங்கா ணம்மானாய்."

[திரும்பவும் நமஸ்கரித்து கன்னத்தி லடித்துக் கொள்கிறார்.]

ஏ! கருணாநிதே! என்னப்பனே! மாயாரூபமாகிய இந்தக் கர்ம பூமியில், இறப்புப் பிறப்பென்னுங் கடலிற்கிடந்து, அதை நீந்திக் கடக்கும் வகையறியாப் பேதையாய் உழன்று தத்தளிக்கும்

அடியேனுக்கு நல்லறிவூட்டி, என்னை எப்படியாகிலும் ஆட் கொண்டு ஈடேற்ற வேண்டுமப்பா! இதுவே எனது வேண்டு கோள். இம்மைச் சுகம் யாதொன்றும் வேண்டேன். சிறிதும் நிலையாத இவ்வுலகத்தின் பெருமை, வாழ்வு, இன்பம் முதலிய எதையும் நான் விரும்பவில்லை. எப்போ தும் மாறுமல் உன்னையே தியானஞ் செய்யும் பாக்கியத்தை யும், உன் பொற்பாத கமலத்தை யடையும் பெரும்பேற்றை யும் பேரானந்தத்தையுமே விரும்பி வருந்தியலைகிறேன். இவ் விதமான என்னுடைய தாகவிடாயைத் தீர்த்தருள வேண்டி னேன். இத்தனை அண்டபிண்ட சராசரங்களைப் படைத்து, அவற்றினுள்ள ஒவ்வொரு அற்பவஸ்துவின் விருப்பையும் பூர்த் திசெய்யவல்ல மூர்த்தியாகிய உனக்கு, உன் அடியார்க் கடிய னுன என்னைக் காப்பாற்றுவது ஒரு அரிய கருமமோ? சம்போ! சங்கரா! மகாதேவா!

[குருக்கள் தீபாராதனை செய்கிறார்.]

வாத:—(நமஸ்கரித்து) ஹர ஹர ஹர ஹர!

தேவாரம்.

" பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கரவம்
பேசுவதும் திருவாயான் மறைபோலுங் காணேடி
பூசுவதும் பேசுவதும் பூண்பதுவும் கொண்டென்னை
யீசனவ னெவ்வுயிர்க்கு மியல்பானுன் சாழலோ "

[குருக்கள் விபூதி கொடுக்க, வாதவூரர்
வணங்கி நமஸ்காரஞ் செய்து
வாங்கி யணிகிறார்.]

வாத:—(குருக்களைப் பார்த்து) ஸ்வாமி! இந்த ஆலயம் சிறிதாகவும் இடிந்துமிருப்பதால், இதை மிகவும் பெரிதாக கட்டிப் புதுப் பிக்க வேண்டுமென்பது அடியேனது விருப்பம். தவிர, விக்கிர கங்களுக்கெல்லாம் விலையுயர்ந்த வைரம் பச்சை முதலிய நவரத் தினங்களால் திருவாபரணங்கள் செய்து சாத்தவேண்டும், இந்த

ஊரில் வந்து தங்கும் சிவனடியார்களுக்குத் தேவையான அன்ன சத்திரங்களும், அவர்கள் தங்க சாவடிகளும், இன்னம் குளங்கள் முதலியவைகளும் ஏராளமாக ஏற்படுத்த வேண்டும். இந்த இச்சையைப் பூர்த்தி செய்யும் பொருட்டு நான் இந்த ஸ்தலத்திற்கு வந்திருக்கிறேன்.

குருக்கள்:—அப்படியா! நிரம்ப ஸந்தோஷம்! ஈசுவரனுடைய அருள் தங்களுக்கு அவசியம் உண்டாகும். இந்த விஷயத்தில் நானும், இந்தக் கோவிலின் ஏனைய பணிமக்களும் தங்களுக்கு எவ்வித ஸகாயம் தேவையானாலும் செய்கிறோம்.

வாத:—(நமஸ்கரித்து) மிகவும் ஸந்தோஷம்! உத்தரவு பெற்றுக் கொள்ளுகிறேன்.

[வாதவூரர் கோவிலை சுற்றி பிரதக்ஷிணம் செய்து வருகிறார்.]

ஜெகதீசா! பரம்பொருளே! உன்னைக் கண்டு பிடித்து, உன் பாதார விந்தத்தை யடையும் துறையறியாமல் தடுமாறி யலைவேனை ஈடேற்றி ஆட்கொள்ளமாட்டாயோ? அதற்குரிய மார்க்கத்தை எனக்கு அறிவிப்பதற்கு ஒரு ஆசானை அனுப்புவது உனக்கொரு பெரிய காரியமோ? என்மனதை உலக வழியிலே திருப்பி இந்தத் தேகத்தைப் பாழாக்கும் மாயாவிகாரத்தி லிருந்து என்னைத் தப்புவிக்கமாட்டாயோ? அதோ தெரிவதென்ன? அந்தக் குருந்த மரத்தடியில் இருப்பவர் யாவர்? அதனடியில் ஒரு பெரியவர் உட்கார்ந்திருக்கிறாரே. அவருக்கருகில் பலர் மரியாதையாக நின்று ஏதோ கேட்டுக்கொண் டிருக்கிறார்கள். குருவினிடம் சிஷ்யர்கள் உபதேசம் பெற்றுக் கொள்ளுவதாகத் தோன்றுகிறது! ஆகா! என்ன என்னுடைய பாக்கியம்! என் ஜென்மாந்திர ஸுகிர்தமே இன்று என்னை இங்கு கொணர்ந்தது! கும்பிடப் போன தெய்வம் குறுக்கிட்டதைப் போல, நான் யாரைத்தேடி யலைகிறேனோ அவரே என் பொருட்டு காத்திருப்பதாகத் தெரிகிறது! ஈசனுடைய மகிமையே மகிமை!

அவனாலாகாத காரியமு முண்டோ! இதோ தோன்றும் பெரியவரிடஞ் சென்று பணிந்து குருவுபதேசம் பெற்று, இந்தப் பாவவுலகின் பற்றை முற்றிலு மொழித்து, இந்தக் கர்ம சரீரத்தை ஈசுவரனுடைய திருப்பணி விடைகளிலேயே உபயோகித்து பிறவிப் பிணியை வேரறுத்து, என்றும் மாறாத நித்தியானந்தத்தை யடையும் வழியைக் கடைப்பிடிக்கிறேன்.

[போகிறார்.]

---

## நான்காவது காட்சி.

இடம்:—திருப்பெருந்துறை.

காலம்:—அன்று மாலை.

[ஈசுவரன் ஒரு சந்நியாசி உருக்கொண்டு தனியாக வருகிறார்.]

(தனக்குள்) ஆகா! என்ன இந்த வாதவூராரின் பக்தி! என்ன இவரது விரக்தி! இவருடைய மனப்பக்குவத்தையறிந்து நானே நேரில் இவருக்கு உபதேசஞ் செய்ய ஒரு குரு வாகி, என் கணங்களை சிஷ்ர்களாக்கிக்கொண்டு, இங்கு வந்து இந்தக் குருந்த மரத்தடியில் தங்கினேன். இவருடைய குருபக்தியைப் போல நான் எங்குங்கண்டதில்லை. என்ன இவருடைய ஒழுக்கம்! என்ன பேரன்பு! இவருடைய உடல் பொருளாவி மூன்றையுந் தத்தமாக வாங்கிக் கொண்டு, மனக் கண்ணினாலே ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களையும் போக்கி ஆசிர்வதித்து, சூட்சும பஞ்சாக்ஷரத்தினாலே சூழ்ந்த பாசக் கட்டை யறுத்து மெய்யானந்தம் விளை நிலத்துய்த்துப் போக்கு மீட்சியுட் புறம்பிலாத பூரண வடிவமாக்கினேன். உபதேசம் பெற்ற வாதவூரர் தேனும், பாலும், கற்கண்டும் அமுதமுமாகத் தித்தித்து, ஊனும், உள்ளமும் உருக உள்ளொளியைத் தெரிந்து, ஆனந்தமான ஆறு நிரம்பிக் கரைப் புறத்தே கசிவது போல, நீங்காத ஞானவாக்கு சரஸ்வதி நாவிலே வந்து குதி

கொள்ள, கும்பிட்ட கைகளும் நடுங்கிய தலையும் நீர் துளும்ப அழுகின்ற கண்களும் புளகாங்கிதமான தேகமும் நாத்தழு தழுத்த அன்புள்ள வார்த்தைகளுமாகத்தம்மை இகழ்ந்து, அக்கினியிலே சொரிந்த வெண்ணெய் போலப் பின்னுமுருகி வணங்கித் துதித்து, சொற்களாகிய மாணிக்கங்களைப் பத்திசெய்து முழுதும் அன்பாகிய கயிற்றாலே வரிசையாகக் கோத்து மாலையாகச் சாத்தினர். இவருடைய பாட்டிற்கு மகிழ்ந்து இவருக்கு மாணிக்கவாசக ரென்னும் பெயருங் கொடுத்து இவ்விடத்திலேயே இன்னும் சிலகால மிருக்கக் கடவாயென்று சொல்லிவிட்டு வந்துவிட்டேன். என்னைப் பிரிந்ததைப் பொருமல், இவர் படும்பாட்டை என்னெனச் சொல்வேன்! இருக்கட்டும், இன்னம் சிறிது சோதனை செய்து இவருக்கு முக்தி அளிக்கிறேன்.

[மறைகிருர்.]

---

## ஐந்தாவது காட்சி.

இடம்:—திருப்பெருந்துறை.

காலம்:—இரண்டொரு மாதங்களுக்குப்பின்.

[காஷாயம், உருத்திராக்ஷம், விபூதி முதலிய அலங்காரத்தோடு வாதவூரர் மிகவும் விஸனத்துடனிருக்கிருர் ]

(வங்கார மார்பிலணி - என்ற திருப்புகழின் சந்தம்)

1. கங்காத ரா!கருணை வாரிதி !யென் மாயவிருள்
பஞ்சாக ஓடவருள் மேவிவந்த மாமணி !யென்
கண்ணூரக் காணுமுன மேகியதேன் மாயமிது ?
ஜெகதீசா!

2. சிங்கார மாகவொளிர் சோமனணி வாமநுதல்
எந்தாயென் பாசமற மாசகல ஆசைகெட
வந்தாயெங் கேகினைபொன் மேனியுமை மாதுவிழை
பரமேசா!

3. விண்ணுறி யேழுலகு மேழுலகு மாகியதில்
எண்ணாத கோடியுரு வாயணுவு மாகுநாதற்
கண்ணா! நின் பாதமரு ளாமலெனை நீவிடுதல்
முறையாமோ ?

4. கண்ணுமி யானெனதென் னுணவழுங் காமமலம்
கண்ணுமலேயகற்றி ஞயெனது பேதைமனம்
புண்ணுகிச் சோரவுடல் வாடுதலை நீயகற்றல்
அரிதாமோ ?

ஆகா! கருணாநிதே! சம்போ! சங்கரா! என்னப்பனே! இந்தப் பாழுமுலகில் கிடந்துழலும் நிலையிலிருந்து தப்பி, என்றும் விலகா உன்னுடைய பாதமலரை அடையும் வழிதுறை அறியாமல், பேதையாய்த் தடுமாறித் தத்தளித்த என் முன்பாக ஞான தேசிகனாக வந்துதோன்றி நாய்க்குத் தவிசிட்டதைப்போல, எனக்கு உபதேசம் செய்து, உனது திருமேனியைக் காட்டி, என்னை யடிமைகொண்டு என் மலபந்தங்களைக் கடிந்து, அஞ்ஞான விருளை யகற்றி என் மனோமெய்களைத் தூய்மையாக்கியருளியும், என்னை உன்னுடைய அடியார் திருக்கூட்டத்திலே கூட்டிக்கொள்ளாமல் மறைந்து விட்டாயே! ஏ! கண்ணுதலே! இது உன் தகைமைக் கடுக்குமோ! இது முறையோ! இதுவே தருமமோ?

(அகவல் ; இராகம் - எதுகுலகாம்போதி).

சங்கரா ! சம்புவே ! சற்குரு வாகிய
புங்கவா ! புனிதனே ! புகலிடம் பிறிதிலேன்.
அப்பனே ! ஐயனே ! அறிவினுக் கறிவதாம்
ஒப்பிலா ஒருவனே ! முதல்கடை நடுவிலாத்
தண்ணளி சொரிந்த தலைவனே ! பிறப்பிற்
கண்ணெளி யிழந்த கதியிலா வந்தகன்
கைதனிற் கிடைத்த கதிர்விரி மணிநிகர்
மெய்யனும் நினதெழில் மெய்யுருக் காட்டியே
சிற்றறி வுடையேன் செயலிலாப் பேதையேன்
முற்றறி வெய்திடு முன்னம கன்றையே !

ஆநந்த வெள்ளமே! அகிலாண்ட கோடியே!
யானெந்த வேளையி லரும்பத மெய்துவேன்!
தேனினும் பாலினுந் தீங்கரும் பிணையிலா
வானவ ரமிழ்தினு மினித்திடு மண்ணலே!
நினையுற நினைத்தழு வேன்றனைத் தடுத்திடு
வினைபெறு மட்கல மென்னலா மிவ்வுடல்
தொலைவழி யறிகிலேன்; தொல்லையி லுழன்றேன்.
மலையினின் றுருட்டி மாய்த்திட லாகுமோ?
எரிதனில் விழுத்தி இன்னலை யொழிப்பனோ?
புரிவதை யறிகிலேன்; புலாலிதை யழித்திலேன்.
நின்பொரு ளல்லவோ! நீக்கினு மகலுமோ!
பொன்பெரி தளித்துப் புரவிகள் கொணர்தர
வேண்டுவ தென்றெனை விடுத்தனன் மதுரைமா
பாண்டியன் மாட்டியான் பகரொணு விடுக்கணை
யடையவி டுத்தையோ! ஆடியில் வருமெனப்
படைதமை யனுப்பினேன். பகர்மொழி பொய்த்தது.
மன்னவன் முனிந்து வரைந்தன னேலை நின்
சன்னிதி யடைந்து சரணென விழுந்தேன்;
புரவிகள் வருமெனப் புரவலன் றனக்கு
வரைவா யென்றெனக் கருளினு யங்ஙனே
நிருபமொன் றனுப்பினே னெருநாற் கங்குலிற்
கனவினிற் றோன்றியென் கவலைகள் விலக்கி
இனியிவண் விடுத்தனன் மதுரைமா நகர்போந்
தடைவா யென்றுநீ பணித்தனை யதனையான்
முடிமீ திருத்தி யங்ஙனே புரிகுவேன்;
மாலயன் றேவரும் மற்றுள யாவரும்
சில நிற் கண்டிலர்; சிறியனேற் கெளியனாய்த்
தோன்றிய தோன்றலே! சுவைபொழி வள்ளலே!
வான்றரு முகிலென வளம்சொரி யமுதமே!
நின்னுய ராற்றலை யென்னெனச் சாற்றுவேன்!
உன்னவுங் கூடுமோ! உணர்தலு மாகுமோ!
திருவடி மலர்தமை யீந்தெனைக் காத்தருள்;
ஒருபெருந் தனியே! ஓங்கிய முதலே!

ஹே! ஜெகதீசா! நான் புரவிகள் வாங்கக் கொணர்ந்த பொருளை யெல்லாம் உன் விருப்பத்தின்படி இவ்வூர் அந்தணர்க்கும், உன் அடியார்க்கும் மனம் குளிரும்படி விநியோகஞ் செய்தும் உன் திருவிழா, திருப்பணி முதலியவற்றில் உபயோகித்தும் செலவு செய்து விட்டேன். என் மனமாகிய விளை நிலத்திலே சிவமாகிய பயிர் வளர, பந்தபாசங்களின் வேரறக் களைந்து, கடவுள் திருவருளாகிய நீரைப் பாய்ச்சி, அந்தமாதி யில்லாத ஆனந்த போகத்தைத் தந்தருளின உழவனாகிய ஞானதேசிகனே! இவ்வுலகத்தை முற்றத்துறந்த என்னை இப்படியே அழைத் தாட் கொள்ளாமல் இன்னமும் என்னையேன் அரசனிட மனுப்பி இந்த உலக விஷயங்களில் புணர்த்தி சோதனை செய்கிறாய்? என்றாலும், நான் உனது திருக் கட்டளையை சிரமேற் கொண்டேன்! இதோ மதுரைக்குப்போய் உன் ஆக்கினையை நிறைவேற்றுகிறேன்.

[புறப்பட்டுப் போகிறார்.]

---

# அங்கம் II

---

## முதலாவது காட்சி.

இடம்:—மதுரையில் வாதவூரரின் மாளிகை வாயில்.
காலம்:—மறுநாள் மாலை.

(அவரது வயது முதிர்ந்த பந்துக்களான செவிட்டு சிவசுப்ரமணியர், விக்ஞானேசர், கணேசர் ஆகிய மூவரும் வருகின்றனர்.)

கணேசர்:—ஓய்! விக்ஞானேசரே! இந்த மனுஷ்யனுக்குப் பைத்தியமாய்த்தா னிருக்கவேண்டும்! என்ன ஆச்சரியமையா! இவ்வளவு நன்றாய்ப் படித்தவனுக்குப் புத்தி இப்படிக் கெடுமோ! சுயபுத்தியோடிருந்தால் இவன் இவ்விதம் ஒருநாளும் செய்ய மாட்டான். யார் வீட்டுப்பணம்? யார் செலவு செய்கிறது?

ஸ்ரீக்ஞா:—'அயலான் வீட்டு நெய்யே என் பெண்டாட்டி கையே' என்பதைப்போ லிருக்கிறது! வேறென்ன. என்ன தய்ாள மையா! தன்னுடைய சொந்தப் பொருளா யிருந்தாலல்லவா அதன் அருமை தெரியப் போகிறது. தான் தேடாப் பொன் னுக்கு மாற்றுமில்லை உரையுமில்லை.

சே. சிவ:—ஆமாம்; துரைதான்! சரியான வார்த்தை! அவன் தன்னை துரையென்றுதான் நினைத்துக்கொண் டிருக்கிறுன். மகா அதி கப்பிரசங்கி! எவர் சொல்லையும் கேட்பதில்லை. தானே சர்வக் ஞன்; சகல கலா வல்லுவன்; எல்லாமறிந்த புலையன்.

கணேசர்:—என்ன நியாயமையா இது! அரசன் குதிரை வாங்கப் பணங்கொடுத்தால் அதைக்கோவிலிலும் குளத்திலும் சம்பிரம மாக வாரிச் செலவழித்ததுமன்றி ராஜனிடம் வந்து "இதோ வருகின்றன. நாளைக்கு வருகின்றன" என்று சொல்லிவிட்டா னையா! அரசன் கணக்குக் கேட்டால், குதிரைகள் வரும்போது அதுவும் கூட வருமென்று சொல்லி எத்திவிட்டானையா! என்ன அசட்டுத் தைரியமையா இது!

விக்ஞா:—ஆம்! அவன் சொன்னது சரியான மறுமொழிதானே! பரிகள் வரும்போது கணக்குத்தான வராது!

சே. சிவ:—ஆமையா! வழிப்பறிதானையா இது! என்ன மானக்கே டையா இது! குலத்தைக் கெடுக்க வந்த கோடாரிக் காம்பா யிருக்கிறுனே இவன்!

கணேசர்:—யாரிடத்தில் இப்படி விளையாடுகிறது? ராஜ ராஜேஸ் வரனுகிய பாண்டிய வீரனிடத்திலா இந்த அயோக்யத்தனமெல் லாம் வைத்துக்கொள்ளுகிறது! கண்ணைப் பிடுங்கிவிடுவானே!

விக்ஞா:—குதிரை மீதே தள்ளியதோடு விடாமல் புதைப்பதற்குக் குழியும்தோண்டியதென்று சொல்லுவார்கள். அப்படியல்லவோ இருக்கிறது. பொருள்களைச் செலவழித்த குற்றமொன்று.

குதிரை வருகிறது வருகிறதென்று மன்னனை ஏமாற்றுகிறது குற்றத்தின்மேற் குற்றம்.

சே. சிவ:—இவனுக்கு சுற்றமேது சுடுகாடேது. எல்லாம் ஒன்று தான். பணத்தாசை பிடித்தால், உயர்குலப் பிறப்பு, கல்வி, நீதி, குணம், ஒழுக்கம், மானம், சுற்றம் எல்லாம் பஞ்சாகப் பறந்து போகுமல்லவா! பணப்பேய் பிடித்தவனுக்குத் தாயும் ஒன்று தான்; பெண்டும் ஒன்றுதான்.

கணேசர்:—அயலார் பொருளை வஞ்சகமாக அபகரித்துச் செலவு செய்தாவது புகழ் சம்பாதிக்க வேண்டுமென்று இவனுக்கு எந்த மடையனையா போதித்தான்?

விக்ஞா:—இது புகழல்ல; புண்ணியம்.

கணேசர்:—நல்ல புண்ணியம்! அயலான் பொருளைத் திருடிய பாவத் துக்கென்ன செய்கிறது?

விக்ஞா:—இந்த அற்பஸங்கதியை அறிந்துகொள்ளும் புத்தியில்லாத வன் எப்படி முதல் மந்திரி உத்தியோகம் செய்து அழப்போகி ருன். மதிகேடனை மந்திரியாகப் பொறுக்கியெடுத்த அந்தப் பாண்டியனுக்கும் இது வேண்டியதுதான்.

கணேசர்:—என்னவோ இப்போதாவது நல்லபுத்தி வருமோவென்று பார்க்கலாம். வாருங்கள் உள்ளே போவோம்.

[வீட்டிற்குள் போகிறார்கள். வாத வூரர் ஒரு மண்டபத்தில் சிவத்தியானம் செய்தவண் ணம் உட்கார்ந்திருக்கிறார்.]

வாதவூரர்:—(தனிமையில்)

(விருத்தம்; இராகம்-செஞ்சுருட்டி.)

"என்னையனே! பொன்னுடையரே!
எழு கொடியுயர்த்த
மன்னு! தென்னு! பெருந்துறை
யெம்மணியே! வழுதிபொருளெல்லா

நின்னாலயத்து நின்னடியாரிடத்தும்
　　செலுத்து நெறியளித்தாய்
பின்னானவனுக் கென்கொண்டு
　　பரிமாச் செலுத்தப் பெறுமாறே ?"

மன்னே! என்னை ஆட்கொண்ட மணியே! வெள்ளி மன்றாடிய அன்னே ! பாண்டியனது பொருட்களை யெல்லாம் நீரே ஒப்புக் கொண்டு எனது அடிமையையும் அங்கீகரித்தீர். ஆனால் பாண்டியன் கோபியாமல் சந்தோஷமடையும்படியாகக் குதிரைகள் வந்து சேரவேண்டுமே. சேராவிடில் அவன் என்னைக் கள்வனென்று மதிப்பானே! பல்லோரறிய என்னை அவமதிப்பானே! என்னையாண்ட பரம்பொருளே! உமக்குத் தெரியாதது என்ன இருக்கிறது ! எல்லாம் உம்முடைய அருள் ! நீர் எந்த வழியில் விடுத்தபோதிலும் அது சம்மதமானதே.

[கணேசர் முதலியோர் வருகிறார்கள்.]

(தமக்குள்) ஏன் இவர்கள் இப்படி வருகிறார்கள்? ஒருநாளுமில்லாமல் இன்று இவர்கள் வரும் காரண மென்னவென்பது தெரியவில்லையே! (எழுந்து வணக்கமாக) வாருங்கள்; வாருங்கள்; உட்காருங்கள்.

கணேசர்:—(சலிப்பாக) உட்காருகிறோம்.

[உட்காருகிறார்கள்]

வாத:—வரவு மிகவும் அருமையாக இருக்கிறது; என்றால் ஏதாகிலும் காரியம் ஆகவேண்டுமா? அப்படியானால் செய்யத் தடையில்லை.

கணேசர்:—எங்களுக்கு உதவி செய்வதிருக்கட்டும். அவரவர்கள் தம் தமக்கு உதவி செய்துகொண்டால், அதுவே போதுமானது.

விக்ஞா:—(சலிப்பாக) அப்பா ! நீ நிரம்பவும் படித்தவன். உனக்குத் தெரியாத எந்த விஷயத்தை நாங்கள் சொல்லப் போகிறோம்.

கணே :—தூங்குகிறவனை எழுப்பலாம். விழித்துக் கொண்டே பாசாங்கு செய்கிறவனை எப்படி எழுப்பக்கூடும்? புத்தியில்லாத

வனுக்கு புத்தி புகட்டினுல் அவன் அதனுல் பயன்படுவீர்ன். கல்வியும் புத்தியுமிருந்தும் மனதார தீய வழியில் செல்கிறவ னுக்கு எவ்வளவு புத்திசொன்னுலும் அவன் அதைக் கேட்கப் போகிருனே? அதில்லை; சேவிடன் காதில் சங்கை ஊதியதைப் போன்றதுதான்.

சே. சிவ:—என்ன ஐயா! நானு சேவிடன்? நீர் சொல்லுகிறதெல்லாம் நன்ருகக் காதில் விழுகிறதே. பிராம்மணன் மூக்கைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கத் தகுந்தவனேயொழிய மந்திரி வே லைக்குத் தகுந்தவனல்லனென்று சொன்னீர். ஆம்; அது சரி யான வார்த்தைதான். மந்திர வேலைக்குப் போகத் தகுந்தவன் தலைச்சுழியால் தவறி மந்திரி வேலைக்கு வந்துவிட்டான். அது சுழியின் குற்றம்.

விக்னு:—முதலில், மந்திரித்தனங்கொண்டு ராஜகாரியம் செய்கி றது பிராம்மண தருமமேயல்ல. அப்படி அதை ஒப்புக்கொ ண்டாலும் அரசனுடைய மனதிற் கேற்றபடி ஒழுகவே ண்டு மென்று பெரியோர் சொல்லக் கேட்டிருக்கிறும். அப்படி இருக்க, இவன் செய்வதொன்றும் நன்ருயிருக்கவில்லை.

வாத:—என்ன விசேஷம்? என் நீங்கள் எல்லோரும் என்மேல் இவ்வளவு கொடுமையாகப் பேசுகிறீர்கள்? உங்கள் விஷயத்தில் நான் ஏதேனும் பொல்லாங்கு செய்தேனு?

கணே:—நீ செய்வது தவறென்று இன்னும் உனது புத்தியில்பட வில்லையா? ராஜனுடைய பணத்தை யெல்லாம் நீ செலவு செய் தது ஒருவருக்கும் தெரியாதா? ராஜனுக்கு இந்த ஸங்கதி எட்டாம லிருக்குமென்று நினைக்கிருயா?

சே. சிவ:—ஆமாம் ஐயா! நம்மையெல்லாம் முட்டாளென்றுதான் நினைக்கிருன்.

விக்னு:—குதிரைகள் வருகின்றன வருகின்றனவென்று சொல்லிய தெல்லாம் பொய்யென்பது அரசனுக்குத் தெரியாதா? வரும்

வருமென்று எத்தனையோ தவணைகள் ஏற்படுத்தினாய்; அத்தனையும் பொய்யாயின. இப்போது கடைசியாக, நாளைக்கு வருமென்று சொன்னாயே; புரவிகள் எங்கிருந்து வரப்போகின்றன?

சே. சிவ :—துறவிகளோ! ஆம்; இவர் பெருத்த துறவிதான். மானம், அவமானம், யோக்கியதை, ஸத்தியம் எல்லாவற்றையும் முற்றிலும் துறந்தவர்தான். பிறருடைய பொருளை அபகரிக்கக் கூடாதென்னும் நாணயத்தை அறவே துறந்தவர். நல்ல சரியான பெயர்தான் கொடுத்தீர். விக்ஞானேசரே! மெச்சினேன்! மெச்சினேன்!

கணே :—

(விருத்தம் : இராகம் - சங்கராபரணம்.)

இரவெலாம் சிலையில் வான மிழிவினு முளையா தென்னக்
கரவிலா தெனைத்தோ நூல்கள் கற்றனை கிளைஞர் நட்டோர்
விரவிய சார்பு கொண்டோர் விருந்தினர் சான்றோர் மிக்க
பரிபவ மடைய நீத்தாய் பாவமுங் கருதல் நீத்தாய்.

எனப்பா! குதிரைகள் நாளையதினம் வந்துசேராவிட்டால் என்ன உத்தரம் சொல்லுவாய்? இதனால் வரும் அவமானமும் துன்பமும் உனக்கு மாத்திரமல்லவே; உன்னையடுத்த பந்துக்கள், நண்பர், சார்ந்தவர்கள், நல்லோர் முதலிய எல்லோருக்கு மல்லவா ஆகும். தவிர அவர்களை இரட்சிக்கவேண்டுமென்னும் கடமையை உத்தேசித்தாகிலும் ஒழுங்காக நடந்துகொள்ள வேண்டுமென்னும் கருத்தில்லையே உனக்கு.

வாத :—ஐயா!

(விருத்தம் : இராகம் – மோகனம்.)

“சுற்றமும் தொடர்பு நீத்தேம்
துன்பமு மின்ப மற்றேம்

வெற்றுடன் மானம் தீர்ந்தேம்
வெறுக்கைமேல் வெறுக்கை வைத்தேம்
செற்றமும் செருக்கும் காய்ந்தேம்
தீவினை யிரண்டும் தீர்ந்தேம்
கற்றைவார் சடையான் கோலம்
காட்டியாட் கொண்ட வன்றெ''

அடாடா ! ஓர் ஊரை வளைத்து சேனைகள் முற்றுகை போடுவதைப்போல நீங்கள் என்னை வளைத்துக்கொண்டு இவ்வளவு கொடுமையாகப்பேச ஆரம்பித்துவிட்டீர்களே! நான் பந்துக்கள், சிநேகிதர்கள், துன்பம், இன்பம், தேகாபிமானம், பொருளாசை, கோபம், கருவம், நல்வினை, தீவினை முதலான இவைகளை யெல்லாம் சந்திரசேகரப் பெருமான் கோலங்காட்டி யாட்கொண்ட அன்றே விட்டு விட்டேன். இனி எனக்குத் தாய், தகப்பன், மாமன், ஆசான், பாட்டன் முதலிய யாவரும் சிவமே; நிராசையே என் மனைவி; சிவபூசையே பிள்ளைகள் ; சிவனடியார்களே பந்துக்கள்.

விக்னா :—இந்த வேதாந்தமெல்லாம் சரிதானப்பா ; நாளைக்கு ராஜன் இந்த மந்திரி வேலையிலிருந்து உன்னை நீக்கிவிட்டால் நீ என்ன செய்வாய் ?

வாத :—அதன்பிறகு நானே ராஜன்; சிவநாமமே என்னுடைய ராஜ்யம்.

கணே :—(ஏளனமாக) ஆனல் இந்த மகாராஜனுக்கு இருக்க இடமும் உண்ணச் சோறும் ஆகிய இரண்டும் தவிர வேறு ஒரு குறையும் இராது.

வாத :—ஐயா ! நான் சோற்றிற் கில்லாமல் உங்கள் வீடுகளுக்கு வந்துவிடப் போகிறேனென்று கவலை கொள்ளவேண்டாம். இப்போது எனக்கு ஒரு வீட்டில் சோறு; அப்போது ஊரில் சமைத்த சோறெல்லாம் என்னுடையது; பூமியெல்லாம் என்னுடைய சயன மாளிகை; கோவணமே ஆடை ; உருத்திராட்சமே ஆபரணம்; விபூதியே அலங்காரம்,

சேடி:—என்ன பைத்தியம் இது! சிவன் சிவன் என்று கட்டிக்கொண்டு அழுகிறுயே! அவன் சங்காரக் கடவுளாயிற்றே; தன்னை யடுத்தவர்களின் வாழ்வு, பொருள் முதலிய இம்மையின் சுகங்களை யெல்லாம் அவன் அழித்துவிடுவானே; அதுவும் தவிர, நம்பினவர்களை நாசம் செய்வதே அவனுடைய கொள்கையாயிற்றே. அப்படி இருக்க உனக்குப் புத்தி இப்படிப் போகுமா! ராஜன் நாளைக்கு உன்னுடைய மந்திரி வேலை, ஐசுவரியம் முதலிய எல்லாவற்றையும் பிடுங்கிக்கொண்டு உன்னைத் தண்டிக்கப் போகிறுனே; அப்போது இந்த சிவன் உனக்கு எப்படி உதவி செய்யப் போகிறுனே பார்க்கலாம்.

விக்ஞா:—(நயமாக) அப்பா! நான் சொல்வதைக்கேள்.

(விருத்தம்: இராகம் - தோடி.)

அப்பனே! பெரிதுங் கற்று யறிவினை யடைந்தாய் செய்கை
தப்பென வுலகோ ருற்றேர் சாற்றுத லுணர்ந்தா யில்லை.
இப்புவி யளிப்போ னேந்த லினியுனை வதைத்தல் திண்ணம்;
கப்பிய இடரை நீக்கல் கருதியே வந்தோ நின்பால்.

நீயோ சிறுபிள்ளை; உலகத்தின் தன்மையை யறியாதவன்; வயதில் முதிர்ந்தவர்களான நாங்கள் இத்தனை மனிதரும், உனக்குத் தீயவற்றைச் சொல்ல மாட்டோம். வீணுக எல்லாப் பெருமைகளையும் ஸுகத்தையும் இழந்து, அவமானத்தையும், துன்பத்தையும் உலகப் பழிப்பையும் பெறவேண்டாம். அரசனிடம் நாமெல்லோரும் போய், உண்மையை வெளியிட்டு உன்னை மன்னிக்கும்படி வேண்டி மன்றுடுவோம். நம்முடைய அரசன் பரம தயாளு. இந்த முறை உன்னை மன்னிப்பான். ஆனுல், நீ இந்த சிவப்பைத்தியத்தை மாத்திரம் விட்டுவிடு. அது மிகவும் பொல்லாதது; யாவற்றையும் நசிக்கச் செய்துவிடும்.

வாத:—ஆகா சிவசிவா! (காதிற் கைகளை வைத்து மூடிக்கொண்டு) போதும் உங்களுடைய போதனை; அதை காதால் கேட்கவும் சகிக்கவில்லை.

(விருத்தம் ; இராகம் - கானடா.)

" இறக்கினு மின்றே யிறக்குக என்று
மிருக்கினு மிருக்க வேந்த
னொறுக்கினு மொறுக்க உவகையு முடனே
யூட்டினு மூட்டுக வானிற்
சிறக்கினும் சிறக்க கொடியதீ நரகம்
சேரினும் சேருக சிவனை
மறக்கிலம் பண்டைப் பழவினை விளைந்தான்
மாற்றுவார் யாரதை யறியீர்."

ஐயா! சிவன் நம்பினோரை நசிக்கச் செய்யும் கடவுளென்றீரே; அது சரியான சொல்! இம்மையில் இந்த உலகின் மாயா விகாரங்களில் மோகங்கொண்டு மயங்கிக் கிடந்து பாவவழியிற் சென்று, இறப்பதும் பிறப்பதுமா யிருந்துழலும் மனிதர், தாம், தமதென்னும் இம்மாயையிலுள்ள பற்றை நீக்கி, என்றும் அழியாத பேரானந்தம் நிறைந்த மோட்சத்தை விரைவிலடைய உதவி செய்யும் கடவுளைக் காட்டிலும் சிறந்த பேருபகாரியுண்டோ! இம்மையின் சுகம் கெட்டாலன்றி மறுமையின் சுகம் எப்படிக் கிட்டும்? இரண்டிலும் ஆசை வைத்தா லாகுமா? நிலையற்றதான இம்மைச் சுகத்தை நான் விரும்பவில்லை யாகையால், இதனால் நான் இறந்தாலும் ஒன்றே; இருந்தாலும் ஒன்றே; எல்லாம் ஸமந்தான். பாண்டியன் கண்டித்தாலும், தண்டித்தாலும், தூஷித்தாலும், பூஷித்தாலும் எல்லாம் ஈசனருளே! இதனால் சுவர்க்கம் சேர்ந்தாலும் சேருகிறேன்; நரகம் சேர்ந்தாலும் சேருகிறேன். பழவினைப் பயனை விலக்க யாரால் முடியும்? எது எவ்விதமாக முடியினும் சிவனை மாத்திரம் நான் மறக்க மாட்டேன்.

விக்ஞா:—(கோபத்தோடு) அப்படியானால், பெரியவர்களான எங்களுடைய வார்த்தையை மதிக்க மாட்டாயா?

வாத:—பெரியவர்களான நீங்களெல்லாம் சிவனை மறந்து விடும்படி சொல்வது நியாயமல்லவே. நான் என்ன செய்வேன்.

ஞானே:—அப்படியானல் போகலாமா?

வாத:—உங்கள் இச்சையின்படி செய்யலாம்.

[மூவரும் எழுந்திருக்கின்றனர்.]

சே. சிவ:—ஓகோ! சிக்ஷையா! எங்களுக்கு சிக்ஷையா செய்விப்பாய்! அப்படியா! உனக்கு அவ்வளவு அகம்பாவமா! கேடுவரு முன்னே மதிகெட்டுவிடு மன்றோ! நாங்கள் சொல்வது இப்போது தெரியாது; நாளைக்குத் தெரியும். அரசனிடமிருப்பது கத்தி முனையிற் பழகுவதைப்போன்ற தென்பதை இன்னமும் நீ அறிந்துகொள்ளவில்லை. அவன் கோபங்கொள்ளாம லிருக்கும் வரையில் சுகந்தான்; கீர்த்திதான்; கோபங்கொண்டாலோ எமலோகந்தான்; நாங்கள் இவ்வளவு தூரம் சொல்லியும் குரங்குப்பிடியாகப் பிடிவாதம் செய்கிறவன் மந்திரியாவனே! இவன் மந்திதான். வாருங்கள் போவோம்.

[மூவரும் போய்விடுகின்றனர்.]

---

## இரண்டாவது காட்சி.

இடம்:—மதுரையில் அரிமருத்தன பாண்டியனது சபை.

காலம்:—மறுநாட் பகல்.

[அரசன், இரண்டாவது மந்திரி, தண்டநாயகன், நான்கு வீரர்கள், சேவகன் முதலியோர்.]

அரசன்:—அடே சேவகா! சேர தேசத்திலிருந்து வந்திருக்கும் தூதனை அழைத்து வா. என்ன விசேஷ சமாசாரம் கொண்டு வந்திருக்கிறனென்று விசாரிப்போம்.

சேவ:—(வணங்கி) உத்தரவு. [போகிறான்.

ஒரு தூதன் வந்து அரசன் முன்பு சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்காரம் செய்து எழுந்திருந்து ஓர் ஓலையை அரசனது காலடியில் வைக்கிறான்.]

அரசன்:—மந்திரி! இந்த ஓலையைப் படித்துப் பாரும்.

இ. மந்திரி:—(ஓலையைத் தனக்குள் படித்தபிறகு) மகாராஜா! சேரன் ஊர்களைக் கொடுக்க மாட்டானும்; போருக்கு வந்தே பெற்றுக் கொள்ளலாமென்று எழுதி யிருக்கிறான்.

அரசன்:—(அதிகரித்த கோபத்தோடு மீசையை முறுக்கி)ஓகோ! அப்படியா! அந்தப் பேதைக்கு அவ்வளவு துணிபு வந்து விட்டதா! இதற்குமுன் உதைபட்டதையெல்லாம் மறந்து விட்டான்போ லிருக்கிறது. இருக்கட்டும்; அவனிச்சைப்படியே ஆகட்டும். தண்டநாயகா! நீ உடனே நம்முடைய படைகளைத் திரட்டிக் கொண்டு போய் அவ்வூர்களைக் கைப்பற்று. அவனு லானதைச் செய்யட்டும்; அவன் நேரில் போருக்கு வருவானு கில், கொஞ்சமும் இரக்கமின்றி அவனைப் பிடித்து சிறைப் படுத்திக் கொண்டுவர வேண்டும்; தெரியுமா?

தண்ட:—(வணக்கமாக) மகிபனே! ஒரு மனு.

அரசன்:—(அதிகக் கோபத்துடன்) என்ன மனு? என்ன சொல்லப் போகிறாய்? இன்னொரு கடிதம் எழுதச் சொல்லுகிறாயோ? போதும் உன்னுடைய புத்திமதி; நான் சொன்னதைச் செய்; மறுமொழி வேண்டாம்.

தண்ட:—(வணங்கி) அதுவன்று மகாராஜா! நம்முடைய குதிரைப் படை முற்றிலும் உபயோக மற்றதாக இருக்கிறது; புதிய குதிரைகள் இன்னும் வந்து சேரவில்லையே. என்ன செய்கிறது?

அரசன்:—(பொங்கியெழும் கோபத்தோடு) அடே சேவகா! கொண்டு வா உடனே அந்தப் பார்ப்பானை.

சேவ:—(அச்சத்தோடு) யாரை? மகாராஜா!

அரசன்:—(அதட்டி) மடையா! கொண்டுவா அந்த வாதலூரனை.

சேவ:—உத்தரவு.

[சேவகன் ஓட்டமாகப் போகிறான்.]

அரசன்:—(கோபத்தோடு) ஆகா! என்ன இவனுடைய துணிபு! என்னை யாரென்று நினைத்துக் கொண்டான்! குதிரைகள் வருமென்று எத்தனை நாட்களாகச் சொல்லிக்கொண்டு வருகிறான்! பொருட்களை யெல்லாம் இவன் வீண்செலவு செய்தானென்று சிலர் முன்னமே சொன்னதை நான் நம்பாமலன்றோ இருந்துவிட்டேன். இவன் பெருந் திருடனென்பது இப்போதே தெரிகிறது. இவனுடைய உண்மை யோக்கியதையை அறிந்துகொள்ளாமல் இவனுக்கு முதல் மந்திரி உத்தியோகம் கொடுத்தேனே! என்ன என்னுடைய மடமை! "மோசம் நாசம் கம்பளி வேஷ" மாக இருக்கிறதே. பெருத்த உருத்திராக்ஷப் பூனையாக இருக்கிறானே இவன்! பார்வைக்கு தர்மஸ்வரூபி. உள்ளே அத்தனையும் விஷம். "படிப்பது பள்; குடிப்பது கள்" என்பதைப்போலிருக்கிறதே.

[வாதவூரர் பஜனை செய்துகொண்டு வருகிறார்.]

(ஜோஜா ஜோஸமைன லலனுஸே தயாகரோ - என்ற
இந்துஸ்தானிப் பாட்டின் வர்ணமெட்டு)

தா தாயிப் பேதையேனுக் கருளுவாய் தயாநிதே!
போது மேழை வாதை தீரும் - பூவை பாகனே! யென்கோனே!
கோவே யென் துங்கா! - காவாய் நிரஞ்சனா!
தேவர் தேவா தேவர் தேவா - தேவர் காணாப் பாதந்தாரும். (தா)

வாத:—(மகாராஜனைப் பார்த்து) மங்களானிபவந்து.

அரசன்:—(மிகுந்த கோபத்தோடு) அடே! வேஷதாரி! உன்னுடைய ஆசிர்வாதம் யாருக்கு வேண்டும்? உன் முகத்தைப் பார்க்கக் கூசுகிறதே துரோகி!

வாத:—(கிலேசத்தோடு) மகாராஜா!

அரசன்:—(கோபத்தோடு) பேசாதே! விபூதி பூசும் கள்ளனே! உன்னை நான் நன்றாக அறிவேன்.

(மருவே செறித்த குழலார் மயக்கி - என்ற திருப்புகழின் சந்தம்.)

அரசன்:—

இராகம் - கல்யாணி.

துறவே தரித்து மிகுநு தகற்ற குறவா! பெருத்த மதிகேடா!
அறவே யனைத்து மறிவே னுதித்த குலமீ திசெற்ற அதிமூடா!

வாத:—

இராகம் - ஆனந்த பைரவி.

இறைவா! சினத்தை மறவாய் பணித்த விதமே யனைத்து முடிவாகும்;
பரிமா வினத்தை விரைவாய் நடத்தி வருவார் தனித்த தலைவோனே.

அரசன்:—

இராகம் - மோகனம்.

புளுகா! எனைத்து முறையோ உரைத்த மொழியே பொறுத்த வினியாமோ?
புதிதோ திருட்டை யறிவேன் சிரத்தை நொடியே யறுத்தல் புரிவேனே

வாத:—

இராகம் - தோடி.

எளியே னிடத்து தயவே இருத்தி மகிபா! பொறுத்தல் தகைவாகும்;
இனியே தமற்ற வெனையா ளுமத்த னருளா லனைத்து நலமாகும்.

அரசன்:—(கோபத்தோடு) ஆகா! என்ன தந்திரம்! அபகரித்துப் போன பணத்தை யெல்லாம் வாயில் போட்டுக்கொண்டது மன்றி, என்னிடம் வந்து இதோ மூன்று நாட்களில் குதிரைகள் வருகின்றன வென்றாய்; மேலும் ஏராளமான பொருளைச் செலவு செய்து, புதிய குதிரைச்சாலைகளையும், குளங்களையும் அமைத்து ஊரை முற்றிலும் அலங்கரிக்கச் செய்தாய். நீ திருடிக் கொண்டுபோன பொருளுக்கு இது வட்டியா? மூன்று நாட்களில் குதிரைகள் வருமென்றாயே. எங்கே குதிரைகள்?

வாத:—(வணக்கமாக) மகாராஜனே! கோபிக்க வேண்டாம். குதிரைகள் எப்படியாகிலும் அவசியம் வந்து சேரும்; உம்முடைய மனது திருப்தியடையும்படி அதிவிரைவில் வரப்போகின்றன,

அரசன்:—(மிகுந்த கோபத்தோடு வாளை யுருவிக்கொண்டு.)

வஞ்சனே! சூதா! வாயான் மதுமொழி மிழற்றும் கள்வா!
நஞ்சமே யுருவாய் வந்த நாணிலீ! நினது யாக்கை
பஞ்செனப் பறக்க வெய்து பருந்தினுக் குணவா யீவேன்;
அஞ்சினே னதனைச் செய்ய அந்தண மரபை நோக்க.

அடே திருடா! போதும் உனது பொய் மூட்டை; யாரிடத்தில் விளையாடுகிறாய். கூசாமல் பொய் சொல்லும் அந்த நாவை இதோ துண்டிக்கிறேன் பார். அடே யாரடா வீரர்காள்?

வீரர்கள்:—ஸ்வாமி!

அரசன்:—முழுத்திருடனான இவனைக் கொண்டுபோய் சிறைச்சாலையில் அடைத்து நன்றாகத் தண்டித்து, பொக்கிஷ சாலையிலிருந்து எவ்வளவு பொருளை இவன் அபகரித்தானோ அவ்வளவையும் வாங்குங்கள். உடனே இழுத்துக் கொண்டு போங்கள். இந்த வஞ்சகனைப் பார்க்கக் கண் கூசுகிறது.

[உடனே வீரர் நால்வர் வாதவூரரைப் பிடித்துக்கொள்ளுகிறார்கள்.]

வாத:—ஹா! ஈசுவரா! இதுவும் உன் திருவுளமோ?

வீரர்:—ஐயா! போங்க.

[அவரைத் தள்ளிக்கொண்டு போகிறார்கள்.]

---

## மூன்றாவது காட்சி.

இடம்:—சிறைச்சாலை.

காலம்:—அன்று மாலை.

[உருவிய வாளுடன் நான்கு வீரர்கள் வாதவூரைக் கொண்டு வருகின்றனர். வாதவூரர் ஈசுவரனை ஸ்தோத்திரஞ் செய்த வண்ணம் வருகிறார்.]

(நினுவினு கதிலேதரா - என்ற
இந்துஸ்தானி வர்ணமெட்டு)

நினையல்லால் கதியேதையா!
ஈசா! பரமேசா! ஜெகதீசா! சர்வேசா! (நி)

நாதனே! என் சோதனையோ?
பேதையினே னேது செய்வேன்?
நாதா! குணநீதா! பொற்பாதா! ஜெகநாதா! (சி)

1. வீரன்:—எங்கே ஐயா பணம்? வை கிளே.

2. வீ:—(பிடித்திழுத்து) பணத்தெ எல்லாந் தின்னுப்புட்டு ஆடு திருடின கள்ளனைப்போலே முளிக்கிறியாமுளி; போடுபணத்தெ இப்பிடி.

[மூலைக் கொருவராய் அவரைப் பிடித்திழுக்கிறார்கள்]

3 வீ:—என்ன ஐபா! நாங்க கேக்கறத்துக்கு செவாப்பு சொல்லாமெ சிவமே பளய பரமசிவமே பல்லொரு மொளமே இன்னு கத்திக்கிட்டே கெடக்கறே! தின்ன பணத்தெயெல்லாம் கக்கு வெளியே.

[கழுத்தைப்பிடித்துக் குனிய வைக்கிறான்.]

வாத:—ஹரா! ஈசுவரா! சம்போ! சங்கரா! இதுவும் உன் திருவருளா! அப்படியே ஆகட்டும். இதையும் ஏற்றுக்கொள்கிறேன். இதைக் காட்டிலும் இன்னும் அதிகமான தாழ்வைக் கொடுத்தாலும் அதையும் ஸந்தோஷமாகப் பெற்றுக் கொள்கிறேன்.

விருத்தம்: இராகம் - நாதநாமக்கிரியை.

" எந்தாய னைத்துலகு மீன்றுயெத் தேவர்க்கும்
தந்தாய் செழுங்குவளைத் தாராய் பெருந்துறையில்
வந்தாய் மதுரைத் திருவால வாயுறையும்
சிந்தா மணியே சிறியேற் கிரங்காயோ!
மூவா முதலாய் முதுமறையாய் மறையும்
தாவாத சோதித் தனிஞானப் பூரணமாய்த்
தேவாதி தேவாய்த் திருவால வாயுறையு
மாவார் கொடியா யடியேற் கிரங்காயோ!
முன்னு முதபொருட்கு முன்னுமுது பொருளாய்ப்
பின்னும் புதுமைக்கும் பின்னுகும் பேரொளியாய்த்

தென்ன மதுரைத் திருவால வாயுறையு
மென்ன யகனே! யெளியேற் கிரங்காயோ!
மண்ணய்ப் புனலாய்க் கனலாய் வளியாகி
விண்ண யிருசுடரா யித்தனையும் வேருகிப்
பண்ண யிசையாய்ப் பனுவலா யெங்கண்ணும்
கண்ணை யென்றுகண் காணுவா றென்கொல்லோ."

1 வீ:—என்ன ஐயா! கண்ணே மண்ணே கொல்லே இன்னுக்கிட்டே கெடக்கறே? பணத்தெக் கிளே வச்சுப்புட்டு மறுபேச்சுப் பேசையா.

2 வீ:—மகா ரோக்கியனெப்பேலே சாமியைக் கூப்பிட்றியோ! ஆரெ ஏமாத்த இந்த ஆண்டிவேசம் போட்றே!—இந்தா, நாங்க இனி மேலே கொஞ்சூண்டுகூட மரியாதெ பாக்கமாட்டோம். பேசாமெ பணத்தெக் கிளே வச்சுடு.

3 வீ:—என்ன ஓய் கேக்கக் கேக்கச் சொம்மா நிக்கறே; முடிச்செ அவுக்கிறியா; குத்தட்டுமா.

4 வீ:—அடே அடே! அடிக்காதீங்கடா! சாமீடா! குடுத்துடு வாருடா; பாவம்டா; கையெ மாத்தரம் நீட்டாதீங்கடா.

2 வீ:—அடே! அண்ணே! நாம்ப கேக்கறத்துக்கு வதிலே சொல்ல லியேடா! இந்தப் பாறையைத் தூக்கி தலையிலே வையுங்கடா.

3 வீ:—ஆமா! அத்தான் சரி; நாம்ப கேக்கறது அப்பத்தான் ஒறெக் கும்.

1 வீ:—ஐயருடா; அடிக்கக்கூடாது. கல்லெ மேலெ வச்சுப்புட்டா, ஐயரெ ரெண்டரை அமுக்கி வச்சா மூணரையாப் போவும்டா!

[ஒரு பெருத்த கல்லை நால்வரும் மிகவும் சிரமப்பட்டுத் தூக்கி வாதவூரர் சிர மீது வைக்கிறார்கள்.]

வாத:—(மிக்க விஸனித்துப் பாடுகிறார்.)

(கருவினுரு வாகி வந்து - என்ற திருப்புகழின் சந்தம்.)

குருவினுரு வாயென்று மனதினிரு ளேக வந்து
குறைகளற வேகடிந்த குருநாதா!
கருதுமடி யேனுக் கென்றிச், சிறமைநிறை பூமிகொன்றுன்,
கழலிலவில காதலின்ப மருள்வாயோ?
அரகரசி வா!குருந்த மரநிழலி லேயெழுந்த
பரமசிவ னே!மடந்தை மணவாளா!
மறுகியுழன் றேனழிந்து மனதுபடு தீதினின்று
விடுதலரி தோசிறந்த வினையாளா!
நரகநிக ராகுமிந்த வசிலமொழி யாத துன்ப
நிலையிலழி வேனையென்று நினைவாயோ?
பரமகுரு வே!முனிந்த மறலிகெட வோடிவந்த
பசுபதிம கேசசம்பு! பரமேசா!
உரகமிழை யாயணிந்த குழக!வினிப் போதுமிந்த
பழையவினை யால்வருந்து மெனைமேவி
உமதுபத மாகுமந்த இனியநிலை தாருமென்ற
றுயிரினுயி ராகநின்ற கருணேசா!

என்ன ஆச்சரியம்! இவ்வளவு பெரிய கல் எனக்கு கனமாகவே தோன்றவில்லையே! இது என்மீ திருப்பதாகவே தோன்றவில்லையே! ஹே! ஜெகதீசா! என்னப்பனே! உன்னுடைய கருணையை என்னவென்று சொல்வேன்! அன்பர்களின் துன்பங்களைப் போக்கும் கருணைவள்ளலென்பது உனக்கே தகும்! மறைவிலிருந்து இந்த ஏழையைக் காப்பாற்றும் நீ, நேரில் காட்சி தந்து என்னை ஆட்கொள்ளலாகாதோ! ஹே! பரஞ்சோதியே! பரம்பொருளே! என் கண்ணே! என் அப்பனே! தயாநிதே! நான் இன்னம் பக்குவநிலை யடையவில்லையோ! உன்னுடைய தரிசனத்தைப்பெற நான் இன்னமும் அருகனாகவில்லையோ! என்னை இவ்விதமான துன்பங்களில் விடுத்து என்னுடைய மனோமெய்களைப் பரிசுத்த மாக்குகின்றாயோ! இந்த உலகத்திலும், இதன் விஷயங்களிலும் விரக்தி யுண்டாக்கிக் கொள்வதில் என்னைப் பயிற்றுகிறாயோ! உயிரபிமானம் உடலபிமானம் முதலியவை

விலக இதுதான் மார்க்கமோ? சர்வக்ஞனாகிய உன்னுடைய அந்த ரங்க நினைவை அற்பத்திலும் அற்பமான அறிவைப் பெற்ற பேதையாகிய நான் உன்னுடைய செயல்களிலிருந்து எப்படி ஊகித்துணரப் போகிறேன்!

1. வீர:—என்னடா அண்ணே! நாம்ப நாலுபேரு தூக்கமுடியாத கல்லெ ரவையூண்டுகூட மதிக்காமெ ஐயரு தூக்கிக்கிட்டு பாட்டுப்பாடி கரவம் ஆட்றத்தெப் பாத்தியாடா?

2. வீர:—இதெல்லாம் மாயண்டா; ஐயருல்ல; மந்தரம் கிந்தரம் போட்டு, அதனாலே தூக்கிடுவாண்டா.

3. வீர:—ஆமண்டா; கல்லெ எடுத்துப்புட்டு கையிலெ கிட்டி கட்டிப் பாக்கலாம். அப்ப இந்த மணிமந்தரம் என்ன செய்யுது பாக்கலாம்.

4. வீர:—அடே! ஏண்டா ஒவித்திரியம் பண்ணுறீங்க! மந்திரிடா; நல்ல ஐயருடா; நமக்கேண்டா பாவம்? சொம்மா இருங்கடா; அவராக் குடுத்தாக் குடுக்கட்டும்.

1 வீ:—நல்லாச் சொன்னண்டா பைத்தியக்காரன்! மவராசா நம்ப கண்ணெப் புடுங்கிட மாட்டாரா. வாங்கடா கிட்டி கட்டுவோம்.

2 வீ:—ஐயரே! இந்த மாயமெல்லாம் இஞ்சே பலிக்காது; பணத்தெக் கீளே வைக்காமப் போனா வீணா தும்பப்பட்டுப் போயிறுவே.

3 வீ:—வதிலே சொல்லாமே ஊமை கணக்காக் கீருண்டா; முதுகு மேலே குத்துங்கடா.

2 வீ:—மரியாதையாக் குடுக்கமாட்டாண்டா; கட்டடா கிட்டியெ.

1 வீ:—ஐயரே! பேசாமெ பணத்தெக் கக்குறியா? இல்லாமெப்போனா இதோ கையை நசுக்கி முறிக்கப் போறோம். என்ன சொல்றே?

2 வீர:—இவுரு பேசாமடங்தேடா; இது சாமீல்ல; பூசெ போடா மெப்போனு பேசாது; கட்டுங்க கிட்டியெ.

[கல்லைக் கீழே இறக்கிவிட்டு கையில் கிட்டிகட்டுகிறார்கள்.]

வாத:—ஹா! ஈசுவரா! மனிதரடையும் எவ்விதத் துன்பத்திற்கும் உன்னுடைய நாமமே மருந்து. அதே சகல தோஷ நிவாரண சஞ்சீவி.

இராகம்: எதுகுல காம்போதி - தாளம் ஆதி.

அரனே கங்காதரனே உன்ற னருளோவிது — சிவமே
அடியே னிந்தவாதை பெற - அமைத்தாய் விதி — சிவமே
தருணமிது வடியேனிதைத் - தடுத்தாளுநி — சிவமே
தவறேது புரிந்தேனோ நின் சரணேகதி — சிவமே
எனையாட் கொண்டமணியே இந்தச் - சிறையோ விடம் — சிவமே
நினைமாமலர் கொண்டர்ச்சிக்கும் - கரமீ தன்றோ — சிவமே
தினமே நின்னை நினைத்தே னெனக் கினியார் துணை — சிவமே
இனிவேறு புகலேயற்றே - னின்றுன் துணை — சிவமே

சம்போ! சங்கரா! மகாதேவா! உன்னையே நம்பினேன். எனக்கு எவ்வித துன்ப முண்டாயினும், என்னை மலையினின் றுருட்டினும், நெருப்பில் வீழ்த்திக் கொளுத்தினும், என்னை அணுவ ணுவாக வாளால் வெட்டிச் சித்திரவதை செய்யினும், இந்த உயிரே போய் விடுவதாயினும் நான் உன்னை மாத்திரம் மறக்க மாட்டேன். மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை என்பன வற்றை யகற்றினேன்; காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம் என்னும் பகைவரைக் கடிந்தேன்; கொல் லாமை, வாய்மை, கள்ளாமை, பெண்டிரை விரும்பாமை, இரக் கம், வஞ்சமின்மை, பொறையுடைமை, அற்பாகாரம், சுசி யுடைமை என்னும் குணங்களையே துணையாகக்கொண்டு, உன் பாதபங்கயத்தையே புகலிடமாக ஒரே உறுதியாகப் பிடித்துக் கொண்டேன்; உன்னையே நினைத்தாடினேன், பாடினேன்,

வாடினேன், வருந்தினேன்; உன்னுடைய திருவருளையே நாடி உன் தூயகழலை சிரமேற் சூடினேன். ஹே கருணாநிதே! ஹே தயாநிதே! ஹே இன்பப் பிழம்பே! அருளொளிச் சுடரே!

[அப்படியே மயங்கி மெய்ம்மறந்து ஓய்ந்து ஒருபுறமாக நிற்கிறார்; ஈசுவரன் வேறு பக்கத்தில் தோன்றுகிறார்.]

ஈசுவரன்:—(தமக்குள்) மாணிக்கவாசகரென்ற பெயர் இவருக்கே தகும்! இவர் நம்மீது முழுமனத்தையும் செலுத்தி அப்படியே ஈடுபட்டு நிற்கிறார்; நம்பொருட்டு இவர் நிரம்பவும் பாடுபடுகிறார். நாம் இனியும் சோதிப்பது ஸரியல்ல. இந்தப் பாண்டியன் இம்மகானுடைய உண்மைச் சிறப்பை யறிந்துகொள்ளும் திறமையற்றவனாய் இவரைப் பலவாறு தண்டித்து வருத்தும்படிசெய்கிறான். இருக்கட்டும்; நாம் ஒரு காரியம் செய்வோம். நந்தி முதலிய நம்முடைய கணங்களை ஏவி, காட்டிலிருக்கும் நரிகளை யெல்லாம் கூட்டி, அவைகளை நிரம்பவும் உன்னதமான குதிரைகளாக மாற்றிக்கொணர்ந்து, அரசனிடம் ஒப்புவித்து நம்முடைய பக்தனை விடுவிப்போம்.

[மறைகிறார். உடனே குதிரைகள் திரண்டுவரும் ஓசை சமுத்திர கோஷம்போலக் கேட்கிறது. அதைக் கேட்ட ஜனங்கள் திகைத்து ஒன்றாய்க் கூடுகின்றனர்.]

முருகையன்:—(ஓடிவருகிறான்) அடே வடிவேலா! அது என்னடா சத்தம்?

வடிவேலன்:—(ஓடிவருகிறான்) இடியோசைபோ லிருக்கிறதே! என்னவோ தெரியவில்லையே!

திக்குவாயன்:—(ஓடிவருகிறான்) அடே! கு கு கு கு கு கு கு கூ குருதே வ வ வ வ.........

முரு:—அடே! குதிரையடா! குதிரையடா!

வடி:—அடேடே! எவ்வளவு பெரிய குதிரைக் கூட்டம் பார்த்தாயடா!

முரு:—எவ்வளவு நேர்த்தியாக அலங்கரிக்கப்பட்டிருக்கின்றன!

வடி:—அவைகளின்மே லிருக்கும் போர்வீரர்கள் எவ்வளவு கம்பீரமாகக் காணப்படுகிறார்கள்! ஆகா! என்ன ஆடை! என்ன ஆபரணம்! கண் கூசுகிறதே!

முரு:—என்ன ஆச்சரியம்! வாத்தியங்களின் ஒலி அண்டமுகட்டிலும் எட்டும்போ லிருக்கிறதே!

திக்கு:—வா வா வா வா வா வா வா வாத வூ வூ வூ வூ வூ வூ வூ......

வடி:—ஆம் ஆம் வாதவூரர் வாங்கிய குதிரைகள்தாம் இவை.

முரு:—பாவம் குதிரைகளின் பொருட்டு அவர் சிறைச்சாலையி லிருக்கிறார்.

வடி:—வாருங்கள் நாம் போய், குதிரை வந்துவிட்டதாக அவரிடம் தெரிவிப்போம்.

முரு:—ஓடுங்கள்; ஓடுங்கள்.

[மூவரும் ஓடுகிறார்கள். திக்குவாயன் மிக்க அவசரமாக முதலில் சிறைச் சாலைக்கு ஓடிவருகிறான்.]

திக்கு:—(மாணிக்கவாசகரை வணங்கி) வவ் வவ் வவ் வவ் வவ் வவ்

வாத:—என்ன அப்பா அது?

திக்கு :—(முன்னிலும் அவசரமாக) வவ் வவ் வவ் வவ் வவ்.........

1 வீரன் :— என்னடா இவன் நாய் கணக்கா கொலேக்கருன்?

2 வீரன் :—ஐயருக்கு அளகு காட்டருண்டா.

3 வீரன் :—இல்லேடா ! பணங் குடுக்காமப் போனு ஐயரெ முளுங்கிப்புடுவேனுன்னு, வாயைத் தொறக்கருண்டா.

திக்கு :—சு சு சு சு சு சு சு சு சு.........

வாத :—இதென்ன வேடிக்கையா யிருக்கிறது! எதையோ சொல்ல ஆரம்பிக்கிருன் ; சொல்ல முடியாமல் தவிக்கிருன் பாவம்!—தம்பி! அவஸரப் படாமல் நிதானமாகச் சொல். என்ன விசேஷம்?

1 வீரன் :—(பகடியாக) மொதல்லே நாய் கொலேச்சான் ; இப்ப சு சு சு சூன்னு நாயைக் கூப்பிட்ருன்.

திக்கு :—சு சு சு சு சு சுவாமிகளே! வவ் வவ் வவ் வந்துட்டுது.

2 வீர :—என்னடா வந்துட்டுது?

1 வீர :—ஐயரு தலெக்கிக் கல்லா வந்துட்டுது?

3 வீர :—இவரெப்புடிச்ச சனியன் இப்ப இஞ்சே இவன் வடிவமா வந்துட்டுது.

வாத :—அப்பா ! பதருமல் பேசு ; என்ன வந்து விட்டது?

சிக்கு :—குக் குக் குக் குருதைங்க.

வாத :—(திடுக்கிட்டு) குதிரைகளா?

[வடிவேலன் ஓடிவருகிருன்]

வடி :—ஆம்! ஸ்வாமிகளே! சமுத்திர கோஷத்தோடு பிரம்மாண்டமான குதிரைகள் வருகின்றன. அவை எண்ணிக்கையில் அடங்காதனவாக இருக்கின்றன. அவைகளின்மே லிருக்கும் வீரர்

களைப் பார்க்க பதினுயிரம் கண்கள் வேண்டும். அவைகளை நடத்திவரும் தலைவனுடைய ஸௌந்தரமும், அவன் ஏறிவரும் குதிரையின் அழகும் கண்கொள்ளாக் காட்சியாக இருக்கின்றன. தாங்கள் சீக்கிரம் போய் பாண்டிய ராஜனிடம் தெரிவியுங்கள்; புறப்படுங்கள்.

வாத :—அப்படியா! இந்தப் பெருத்த முழக்கம் வேறு என்னவோ வென்றல்லவோ ஸந்தேகித்தேன்; இப்போதே உண்மை தெரிகிறது! இதுவும் ஈசன் செயல்தான்! கடவுளை நம்பினோர் கைவிடப்படமாட்டா ரென்பது பொய்க்காதல்லவா.

2 வீரன்.—ஐயரே! அப்பிடியானு வாங்க; ராசாக்கிட்ட போயிச் சொல்லலாம்.

வடி :—ஆம்! ஸ்வாமி! புறப்படுங்கள்.

[யாவரும் போகிறார்கள்.]

---

## நான்காவது காட்சி.

இடம்:—அரண்மனையின் தலைவாசலிலுள்ள மணிமண்டபம்.

காலம்:—அன்று மாலை.

[மணிமண்டபத்தில் ஒரு சிம்மாஸனத்தின்மீது பாண்டியன் நேர்த்தியான அலங்காரத்தோடு உட்கார்ந்திருக்கிறான். தாதியர் சாமரை வீசுகின்றனர், வாதவூரர், மற்ற மந்திரிகள், தண்டநாயகன், வீரர்கள், ஸேவகன் முதலியோரிருக்கின்றனர்.]

அரசன் :—என்ன ஆச்சரியமிது! ஒரு நாழிகையாக உட்கார்ந்திருக்கிறோம். இன்னமும் குதிரைகள் வந்துசேர வில்லையே! இது வேடிக்கையாக இருக்கிறதே!

தண்ட :—முதலில் எழுந்த ஆரவாரமெல்லாம் இப்போது கொஞ்சங் கூட உண்டாகவில்லையே! அடே சேவகா! நீ போய்க் குதிரைகள் வருகின்றனவா வென்று பார்த்துவிட்டு வா.

[சேவகன் ஓடுகிறான்.]

அரசன் :—வாதவூரரே! என்ன மாயமிது? குதிரைகள் வருகின்றன வென்று அப்போதே சொன்னீரே! குதிரைகள் உண்மையில் வந்தால் இங்குவர இவ்வளவு தாமதமாகுமோ?

வாத :—மகாராஜனே! அவை வந்தபோது பார்த்ததாகப் பலர் தெரிவித்தனர். அதற்கிணங்க, ஒருவித ஆரவாரமும் கேட்டது. அவற்றை நம்பி நான் இவ்விடத்தில் தெரிவித்தேன். அவை இன்னமும் வராத காரணம் எனக்கும் விளங்கவில்லை. இது அந்தச் சந்திரசேகரக் கடவுளின் திருவிளையாட்டாகத்தா னிருக்க வேண்டும்.

அரசன் :—( கோபத்தோடு ) அவருடைய திருவிளையாட்டோ? வாதவூரருடைய திருவிளையாட்டோ? ஐயா! நீர் இவ்விதம் நடந்து கொள்வீரென்று நான் கனவிலும் நினைக்கவில்லை. இதென்ன மோசம்! நீர் உதித்த குலமென்ன! படித்த படிப்பென்ன! செய்த காரியமென்ன! இந்த விஷயத்தை மனதால் நினைக்க நினைக்க எனக்கே வெட்கமாக இருக்கிறதே.

(நகுமோமு கனலேது என்ற கீர்த்தனையின் வர்ணமெட்டு.)

இராகம் - ஆபேரி - தாளம் - ஆதி.

பல்லவி.

தகுமோ? இம் மிகுமோசம் தானேநின் தவமகிமை?
ஜெகமீது காணேனிப் புதுமையையான். (தகு)

அநுபல்லவி.

தகைவாமோ? குலநீதி தவறாத நீர்மையிதோ?
மிகுநு திதுவே எனுமதிகேடோ? வெகுவிந்தையிதாகும்! (தகு)

சரணம்.

மறையோரில் நீயேமிகு அறிவோனு மெனவேயான்
தரைமீதில் உயர்வான தானந்தனை யீந்தேன்;
நிறைமீறி மதிமாறி எவரோஇந் நிலையடைவார்?
முறையோ? இதுவே முதிர்வின் பயனுமோ?
முழு நிந்தையிதாகும், (தகு)

[சேவகன் ஓடிவருகிறான்.]

சேவ:—மகாப்பிரபு! கண்ணுக் கெட்டிய தூரம் வரையில் குதிரைகள் காணப்படவில்லை; ஓசையுமில்லை. ஜனங்களில் எவரும் குதிரையைப் பார்க்கவுமில்லையாம்.

அரசன்:—(கோபத்தினுல் கண்களில் தீப்பொறி பறக்க) ஆகா! இதெல்லாம் இந்தத் திருடனுடைய சூதென்பது எனக்கு ஆரம்பத்திலிருந்தே தெரியும்; அடே வாதவூரன்!

விருத்தம்: இராகம்; கானடா.

பேதையே! மான நீத்த பித்தனே! கயவா! நீயிச்
சூதையே புரிவாயென்ற சூசனை யுணர்ந்தே னில்லை.
ஆதலப் பதரே! யென்னை யாரென மதித்தா யிந்தப்
பூதல வேந்த னென்ற புத்தியை மறந்தாய் கொல்லோ!

ஆகா! என்ன உனது மனத்துணிபு! நம்முடைய பொருளையெல்லாம் அபகரித்ததுமன்றி மேலும் பலவாறு நம்மிடம் பொய்யுரைத்து நம்மை ஏமாற்றத் துணிந்தாயா? யாரிடத்தில் விளையாடுவ தென்பதை மறந்து விட்டாயோ? அடே! அற்பனே! உனக்குத் தகுந்தவாறு தண்டனை செய்விக்கிறேன். அடே! தண்டநாயகா! ஏன் சும்மா நிற்கிறுய்?

[தண்டநாயகனும் வீரர்களும் மறுபடி வாதவூரைப் பிடித்து மூலைக்கொருவராக இழுத்து வருத்துகின்றனர்.]

1 வீ:—அடே! சூனியக்காரப் பாப்பான்! ஒனக்கு ஒடம்புலே ரோக்கிதே, ரோசம், மானம், சூடு, சொணை ஒண்ணுமில்லியா? பணத்தெ ஒடனே கிளே கக்குறியா? நாயெ அடிக்கறுப்புலே அடிக்கணுமா? வா இப்பிடி.

2 வீ:—மவராசன்னு நெனெச்சியா? ஒங்க வூட்டுக் கிள்ளுக்கிரேன்னு பாத்துக்கிட்டியா? பணத்தெ இப்பவே குடுத்தா ஆச்சு; இல்லாமெப்போனு குத்தற குத்துலே கொடல் கும்பியெல்லாம் வெளியே வந்துடும் பாத்துக்க.

1 வீ:—ஐயரே! சொம்மாப் பேசாமெ நின்னு நின்னு ஏமாத்திடலா முன்னு பாத்தியா? நீ செத்தாலும் ஒன்னொட பொணத்தெக் கூட அடிச்சுப் பணத்தெ வாங்காமெ விடப்போறதில்லே. வா இப்பிடி. வெட்டப்போற கடா மாதிரி முளிக்கிறியா!

(இழுக்கிறான்.)

வாத:—(கண்ணீர் விடுத்து) ஹா! கருணாநிதே!

அகவல் - இராகம்; தேசிகதோடி.

"திருவருள் ஞானம் சிறந்தருள் கொழிக்கும்
குருவடி வான குறைவிலா நிறைவே!
நின்ற வொன்றே! நின்மல வடிவே!
குன்றாப் பொருளே! குணப்பெருங் கடலே!
ஆதியு மந்தமு மானந்த மயமாம்
சோதியே! சத்தே! தொலைவிலா முதலே!
சீர்மலி தெய்வத் திருவரு ளதனாற்
பார்முத லண்டப் பரப்பெலா நிறுவி
அண்டச முதலா மெண்டரு நால்வகை
எழு பிறவியிற் றுழா தோங்கும்
அனந்த யோனியி னினம்பெற மல்க
அணுமுத லசல மான வாக்கையும்
கணமுத லளவிற் கற்ப காலமும்
கன்மப் பகுதித் தொன்மைக் கிடா
யிமைப்பொழு தேனுந் தமக்கென வறிவிலா
வேழை யுயிர்த்திரள் வாழவ மைத்தனை.
எவ்வுட லெடுத்தா ரவ்வுடல் வாழ்க்கை
இன்ப மெனவே துன்ப மிலையெனப்
பிரியா வண்ண முரிமையின் வளர்க்க
ஆதா ரமாக் காதலு மமைத்திட்
டே யின்றியே தேக நானென
அறிவு போலறி யாமை யியக்கிக்
காலமும் கன்மமும் கட்டும் காட்டியே
மேலு ளரகமு மேதரு சுவர்க்கமும்
மாலற வருத்தினை யேலும் வண்ணம்

அமையாக் காதலிற் சமய கோடி
அறம்பொரு ளாதி திறம்படு நிலையில்
குருவா யுணர்த்தி யொருவர்போ லனைவரும்
தத்த நிலையே முத்தி முடிவென
வாத தர்க்கமும் போத நூல்களும்
நிறைவிற் காட்டியே குறைவின்றி வயங்க
அங்கங்கு நின்றனை யெங்கு மாகிச்
சமயா தீதத் தன்மை யாகி
இமையோர் முதலிய யாவரு முனிவருந்
தம்மைக் கொடுத்திட் டெம்மை யாளென
எசத் திருக்க மாசற்ற ஞான
நலமுங் காட்டினை ஞானமி லேற்கு
நிலையுங் காட்டுதல் நின்னருள் கடனே."

ஹே! ஆபத் பாந்தவா! தயாபரனே! எங்கும் நிறைந்த பராபர வஸ்துவே! என் கண்ணே! கருணைக்கடலே! இன்னமும் சோதனையோ? அடியேனுக்கிரங்காயோ? தாயை நினைத்த லறுங் கன்றின் முகம் பாராயோ? சம்போ! சங்கரா! மகா தேவா! இனி நான் உன்னை என்ன வென்றழைப்பேன்? என் மனக்குறையை என்னவென்று கூறப்போகிறேன்?

[அப்படியே தளர்ந்து விழுகிறார். திடீரென்று திரும்பவும் சின்னம், காளம், முதலிய வாத்தியங்களின் முழக்கம் அருகில் உண்டாகிறது; வேறொருசேவகன் ஓடிவருகிறான்]

சேவ:—மகாராசா! குதிரைகள் வந்து விட்டன.

அரசன்:—(ஆச்சரியத்தோடு) எங்கே?

சேவ:—இதோ வாசலில் வந்து நிற்கின்றன. சமுகத்திற்கு வர, குதிரைகளின் தலைவன், உத்தரவை எதிர்பார்க்கிறான்.

[வாதவூரரை வீரர்கள் உடனே விட்டு அப்பால் போகின்றனர்.]

அரசன்:—ஆகா! அப்படியா! நிரம்ப ஸந்தோஷம்! அவரை உடனே நமக்கெதிரில் அழைத்துவா.

[சேவகன் போகிறான்; அடுத்த க்ஷணத்தில் ஈசுவரன் குதிரை வீரனைப் போல அரசனுக் கெதிரில் வருகிறார். அவரது கிருபாதிருஷ்டி பாண்டியன்மீது பட, அவன் தன்னை மறந்து மயங்கி எழுந்து இரண்டு கைகளையும் தலை மேலே குவித்துக்கொண்டு வணங்கி நின்று.]

அரசன்:—ஐயா! வரவேண்டும்! (உடனே ஒரு புறமாக வெட்கத்தோடு திரும்பி தனக்குள்)என்ன ஆச்சரியம்! இவன் சாதாரணக் குதிரை வீரன்; இவனை நான் இவ்விதம் வணங்கி விட்டேனே! என்ன என்னுடைய மடமை!

ஈசு:—பாண்டிய ராஜனே! உம்முடைய சொல்லை மீறாத மந்திரியானவர், உம்முடைய பொருளை யெல்லாம் கொணர்ந்து, எனக்கும், என்னைச் சார்ந்தவர்களுக்கும் நிரம்பவும் கொடுத்தார். இந்தக் குதிரைகள் தேவர்களுக்கே யல்லாமல், மனிதருக்குத் தக்கவையன்று. குதிரையின் லட்சணமறிந்தவர்களாலும் விலையளவு சொல்லக் கூடாதவைகளாய், சாஸ்திரத்திலே சொல்லப்பெற்ற லட்சணங்கள் அமைந்துள்ளனவாய், நல்ல குதிரைகள் உமக்கு வந்து சேர்ந்திருக்கின்றன.

அரசன்:—அப்படியா! நிரம்ப ஸந்தோஷம்! எல்லாம் என்னுடைய முதன்மந்திரியான வாதவூராருடைய அன்பினாலும் நன்மையினாலும் கிடைத்தது. அவர் செய்த இந்தப் பேருதவிக்கு நான் அவருக்கு என்ன கைம்மாறு செய்யப்போகிறேன்!

ஈசு:—மகாராஜனே! குதிரைகள் சமயம் வாய்த்தால் மதிலையும் கடந்து போகும்; கண்ணும் நுழையாத பலகணியினும் நுழைந்து போய்விடும்; காடுமேடெல்லாம் தமக்கு வழியாகச் செய்து

கொண்டு போகும்; பசி வந்தால் கிடைத்தவற்றை யெல்லாந் தின்னும். இவைகளில் ஒன்று உம்மிட மிருப்பினும் உமக்கு லட்சுமி கடாக்ஷமும் குறையாத செல்வமும் மேலான கீர்த்தியும் உண்டாகும்.

அரசன் :—அப்படியா! என்னுடைய பாக்கியமே பாக்கியம்! மந்திரீ! விலைமதிப்பற்ற பீதாம்பர மொன்று கொண்டு வாரும்.

[இரண்டாவது மந்திரி பீதாம்பர மொன்று கொணர்ந்து அரசனிடம் கொடுக்கிறான்.]

அரசன்:—(அதை ஈசுவரனிடம் நீட்டி) அரண்மனையின் வழக்கப்படி இந்த மரியாதையைப் பெற்றுக் கொள்ளும்.

ஈசு:—அப்படியே பெற்றுக் கொள்கிறேன்.

[கையால் வாங்காமல் சவுக்கின் நுனியால் வாங்குகிறார்.]

அரசன்:—(ஒரு பக்கமாகத் திரும்பி தனக்குள்) ஆகா! நான் எவ்வளவு உள்ளன்போடு கொடுத்தேன். இவன் என்னை அவமதித்து விட்டானே! இது இறுமாப்போ அன்றி மௌடீகத்தனமோ! என்ன வென்று சொல்வேன்?

வாதவூரர்:—(அரசனுக்கு மாத்திரம் கேட்கும்படி) மகாராஜனே! இவர்களுடைய தேசத்தில் அரசர் கொடுக்கும் வஸ்திரத்தைக் குதிரை வீரர் இப்படித்தான் சவுக்கினல் வாங்குதல் வழக்கம். இதுவே மரியாதைக் கழகு. கோபத்தைத் தணித்தருளும்.

அரசன்:—அப்படியானுல் சரிதான்.

ஈசு:—குதிரைகளை யெல்லாம் இப்போதே நன்ருகப் பார்த்துக்கொள்ளுங்கள். பிறகு குதிரைகளில் குற்றம் குறைபாடுகள் சொல்லக்கூடாது. நான் இப்படிச் சொல்வதைப்பற்றி ஆயாசப்படவேண்டாம். அதுதான் குதிரைவர்த்தக முறை.

அரசன்:—சரி! அப்படியே பார்க்கிறேன்.

[அரசன் முதலியோர் குதிரைகள் நிற்கு மிடத்திற்குப் போய்ப் பார்த்துவிட்டு ஒரு குதிரையைப் பிடித்துக்கொண்டு வருகிறார்கள். அதற்கு முத்துமாலை, சதங்கை, பூமாலை, பட்டாடை, சந்தனம், குங்குமம் முதலியவற்றால் அலங்காரம் செய்து தூபதீபங்காட்டுகிறார்கள். பிறகு ஈசவரன் அதன் கடிவாளக் கயிற்றைப் பிடித்து வாத்திய முழக்கத்தோடு அரசனிடம் கொடுக்கிறார்.]

அரசன்:—மந்திரீ! வந்திருக்கும் குதிரைவீரர்களுக் கெல்லாம் நல்ல வஸ்திரங்கள் சன்மானம் கொடுத்தனுப்பும். நான் இவருக்குக் கொடுக்கிறேன்.

[மந்திரி போகிறான். அரசன் திரும்பவும் கொடுத்த இன்னொரு வஸ்திரத்தை ஈசவரன் வாங்கித் தலையி லணிந்துகொண்டு மறைகிறார்.]

அரசன்:—தண்டநாயகா! வாதவூராருக்கு நாம் நாளையதினம் காலையில் தகுந்த விதத்தில் மரியாதை செய்ய வேண்டும். அதற்குத் தேவையான ஏற்பாடுகளைச் செய்யும்படி இரண்டாவது மந்திரியிடத்தில் தெரிவி. நேரமாகிறது; நான் அரண்மனைக்குப் போகிறேன். வாதவூர் ஸ்வாமிகளே! உத்தரவு பெற்றுக் கொள்கிறேன்.

[வணங்குகிறான்.]

வாத:—(ஆசீர்வதித்து) சித்தம்.

[அரசன் போகிறான்.]

---

## ஐந்தாவது காட்சி.

காலம்:—அன்றிரவு.

இடம்:—அரண்மனை வாசல்.

[எங்கும் நரிகள் ஊளையிடும் ஓசை யுண்டாகிறது. குதிரைக் காவலர் ஒருவரின்பின் ஒருவராக ஓடி வருகிறார்கள்.]

1 காவலன்:—அடேடே! நரிடா! நரிடா! எங்கே பாத்தாலும் நரி ஓடுதுடா!

2 கா:—இத்தனை நரியும் அரமனைக் குள்ளற எப்பிடி வந்திச்சுடா? நூறு லெச்சம் கோடிக் கணக்கா ஓடுதே!

3 கா:—(நொண்டிக்கொண்டு வருகிறான்) ஐயோ! அண்ணே! காலு போச்சே! ஐயோ! காலுபோச்சே! என்னடப்பா செய்வேன்? ரெத்தம் ஒழுகுதடா!

2 கா:—ஐயோ பாவம்! எம்பிட்டுப் பெரிய காயங்கறேன்.

4 கா:—(காதைப்பிடித்த வண்ணம் அழுது கொண்டு வருகிறான்) அம்மா! அப்பா! உயிர் போவுதே! ஐயோ! அப்பா! அம்மாடி! ஐயாடி! ஆத்தாடி!

2 கா:—(ஏளனமாக) அடே! நரியே என்னடா பண்ணிப்புட்டே?

4 கா:—ஐயோ! யம்மா! என் காதுபோச்சே! பாளாப்போன நரி குடும்பியோடே காதெப் பிச்சிக்கினு போயிடிச்சுடா.

3 கா:—அடே! காது எப்பிடிடா போச்சு?

4 கா:—கீளே படுத்திருந்தேன்: நரி எம்மேலே உளுந்து காதெக் கடிச்சுப் புட்டுதுடா.

1 கா:—என்ன அதிசயண்டா இது! இந்த நரி யெல்லாம் உள்ளற எப்பிடிடா வந்துச்சு?

2 கா:—நேத்து வந்த புதுக் குதிரெ யெல்லாம் ஒண்ணேக் கூட காணும்டா! எல்லாம் நரியா மாறிப்போச்சுடா!

3 கா:—பளைய குதிரெ யெல்லாம் கடிபட்டு செத்துப் போச்சுடா! எங்கிட்டு பாத்தாலும் நெத்தம் வெள்ளமா ஓடுதுடா!

[நரிகள் ஊளையிடும் ஓசை ஊருக்குள் கேட்கிறது; ஜனங்கள் கூச்ச லிட்டுக் கொண்டு ஒருவரின் பின்னொருவராக ஓடிவருகின் றனர்.]

1 மனிதன்:—(அரைத்தூக்கத்தில் எழுந்து ஓடி வருகிறான்) நழி நழி நழி நழி நழி நழி—

2 மனி:— ஐயோ! நரி! நரி! பயிர்க்குழி! பொடலஞ்செடி! அவரைக் கொடி! வெண்டைச் செடி! எல்லாம் போச்சே! ஐயோ! எம் பொளப்புப் போச்சே! பாளாப்போன நரி எல்லாச் செடியையும் புடுங்கி எறிஞ்சுட்டுதே!

3 மனி:—ஐயோ! நரி! நரி! ஆடுமாடெல்லாம் கடிச்சுட்டுதே! நான் வளத்த கோளியெல்லாம் வாயிலே கௌவிக்கிட்டுப் போவுதே! அண்ணே! ஓடுங்கடா; தொரத்துங்கடா; உடாதிங்கடா.

ஒரு ஸ்திரி:—(மார்பி லடித்துக்கொண்டு ஓடி வந்து) ஐயோ! எம் புள்ளெ! ஐயோ! எம்புள்ளெ போவுதே! போவுதே! அதோ போவுதே! ஐயோ போச்சே! போச்சே! என் ராசாவைக் கொண்டுபோவுதே! பெத்த வவுறு பத்தி எரியுதே! ஐயோ! ஓடுங்களேன்; ஒங்களுக்குப் புண்ணிய முண்டையா! எத்தினி நாளோ தவமிருந்து பெத்த புள்ளெ ஐயா (ஓடுகிறாள்).

ஒரு பிச்சைக்காரன்:—ஐயா! ஐயா! போச்சையா! போச்சையா! சோறுங்கறியும் போச்சையா! ஆசையா வச்சிருந்தேன் ஐயா! கொஞ்சூண்டுகூட மிச்சமில்லாமெ தின்னுப்புட்டுதையா! எம்பிட்டு ருசி ஐயா! தொட்டு நக்கின தேம்பேலெ இனிச்சுதே; ஐயோ! நாக்கு ஊறுதே; எல்லாத்தியும் திங்க மனம் வராமே அப்புடியே வச்சேனே பாவிப்பய.

[வயிற்றில் அடித்துக்கொள்ளுகிறான்.]

3 கா:—அப்பா! காது நோவுதே!

[காலைப் பிடித்துக் கொள்கிறான்.]

4 கா:—காதுலே சடுதை வளந்துபோவுண்டா; நான் காதுக்கு என்னடா செய்வேன்? அடே! எங்காது எங்கிட்டாச்சும் கெடக்கான்னு பாருங்கடா; அதுலே கடுக்கன் இருக்குதுடா.

2 கா:—எல்லாரும் வாங்கடா; ராசாக்கிட்டப்போயிச் சொல்லுவோம்.

பிச்சை:—ஐயா! என்னெயும் அளெச்சுக்கிட்டுப் போங்கையா; சோறையா! அந்த மாதிரிச் சோறுங் கறியும் திரும்பத் திங்காமெப்போனா ஏங்கிச் செத்துப்போயிறுவேன் ஐயா!

[யாவரும் போகிறார்கள்.]

---

# அங்கம் III

---

## முதலாவது காட்சி.

இடம்:—அரண்மனையின் கொலுமண்டபம்

காலம்:—மறுநாட்காலை.

[இரண்டாவது மந்திரி, தண்டநாயகன், சேவகர் முதலியோர் நிற்கிறார்கள். அரசன் மிகவும் கோபத்தோடு வேகமாக வருகிறான்.]

தண்ட நாயகன்:—மகாராஜா! நமஸ்காரம்.

மற்றவர்:—மன்னவா! நமஸ்காரம்.

அரசன்:—என்ன ஆச்சரியமிது! நேற்று எவ்வளவோ அழகாகக் காணப்பட்ட குதிரைகள் எப்படி நரிகளாக மாறின! இது என்றைக்கும் கேள்விப்படாத விநோதமாக வல்லவா இருக்கிறது! அவைகளைக் கண்டு நேற்று நான் அடைந்த ஸந்தோஷம் முற்றிலும் பாழாய்விட்டதே; நாம் போரில் வெல்லுவதற்குத் தடையில்லையென்று நான் கொண்ட உறுதியும், இறுமாப்பும் அழிந்து

போயினவே; புதிய வெள்ளம் பழைய நீரையும் அடித்துக் கொண்டு போய்விடுவதைப்போல, முன் இருந்த குதிரைகளும் கொல்லப்பட்டனவே! இது அந்த வாதவூரான் செய்த சூதே யன்றி வேறல்ல. அவன் பெரிய மந்திரவாதியாக இருக்கிறான். நம்முடைய பொக்கிஷச்சாலையிலிருந்து கொண்டுபோன பொருளை யெல்லாம் அபகரிக்கும் எண்ணத்தோடல்லவா அவன் காட்டிலுள்ள நரிகளைக் குதிரைகளாக்கிக் கொணர்ந்து இப்படி நம்மை வஞ்சித்திருக்கிறான். அவனை அணுவணுவாக வெட்டி சித்திரவதை செய்தாலும், அது போதுமான தண்டனை யாகாது; இப்படிப்பட்ட சூனியக்காரனை உயிரோடு வைத்திருந்தால், அவன் இன்னும் யாரை எவ்விதமாக வஞ்சிப்பானோ தெரியவில்லை. அவனுடைய உயிரை வாங்குவதே சரியான காரியம்; அடே! தண்டநாயகா!

தண்ட:—மகாராஜா!

அரசன்:—உடனே அந்த வாதவூரனைக் கட்டி இழுத்து வாருங்கள்.

(போகிறான்.

அரசன்:—மந்திரீ! பார்த்தீரா முதல் மந்திரியின் காரியத்தை?

மந்திரி:—(தலை குனிந்து) அண்ணலே! நான் என்ன சொல்லப் போகிறேன்! எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டா முய்வில்லை செய்ந் நன்றி கொன்ற மகர்க்கு என்று சொல்லப்பட்டிருக்கிறது. மனதில் திருட்டு நினைவை வைத்துக்கொண்டு, நீங்கள் செய்த நன்மைகளை மறந்து, தீயவழியிற் செல்லுமிவன் எவ்வளவுதான் தவ வேஷம் பூண்டாலும், இவன் கடைத்தேற மாட்டான். இவன் நரகமடைவது நிச்சயம். தங்களுடைய சித்தம்போலச் செய்யலாம். இவனைப்பற்றிப் பரிந்து பேசுவதற்கு யாதொரு நியாயமுமிருப்பதாகத் தோன்றவில்லை.

[வீரர்கள் வாதவூரரின் கையைக் கட்டி யழைத்து வருகிறார்கள்; தண்டநாயகனும் வருகிறான். அவர் மெய்ம்மறந்து ஈசுவரனைத் தியானம்செய்துகொண்டு வருகிறார்.]

.(ஸுத்த ப்ரம்ம பராத்பர ராம்-என்ற பாட்டின் வர்ணமெட்டு.)

(1). ஸுத்தக்ஞான பராபரமே!
முத்திக்கான நிராமயமே!
சித்தத்தூறு மனோஹரமே!
பக்தர்க்காகு தயாபரமே!

(2). விண்ணவர் மண்ணவர் நாயகமே!
கண்ணுறை கண்மணி யே! ஸுகமே!
எங்கும் தங்குநி ரஞ்சனமே!
மங்கைதன் பங்குறை சின்மயமே!

(3). பூரணமாய் நிறை ஸத்தியமே!
காரணமா யமை நித்தியமே!
ஓருரு வாகிய தத்துவமே!
காரிய மாகும நித்தியமே!

(4). மன்றி னடம்புரி மாதவமே!
என்று மிருந்த புராதனமே!
சங்கர சம்பு ஸதாசிவமே!
ஸங்கடம் தீர்த்தருள் வாய்பரமே!

அரசன்:—(ஒரு புறமாகத் திரும்பி) இந்தப் படுபாவியைப் பார்ப்பதற்கே கண் கூசுகிறதே! என்ன மோசம்! என்ன மாயம்! அடே! உருத்திராட்சப்பூனையே! யார் குடியைக் கெடுக்க இந்த ஆண்டி வேஷம் போடுகிறாய்?

வாத:—சங்கரா! சம்போ! மகாதேவா!

அரசன்:—(கோபத்தோடு).

(மகனே மகனே என்று—என்ற அரிச்சந்திர விலாசப்
பாட்டின் வர்ணமெட்டு.)

இராகம்—மோகனம். தாளம் சாப்பு.

சிவனே சிவனே யென்று தவவேடங் கொண்டிங்கு
ஜெகஜால வித்தைகள் செய்கிறாய்; பேதாய்!
எவனோவென் றென்னை மதிக்கிறாய்.
எத்தனை சூதுகள் வித்தைகள் கற்றனை!
எற்றுவேன் வாளினால் பாதகா!

வாத:—

[இராகம்: கொண்டா; தாளம்: சாப்பு.)

மன்னவர் போற்றிடும் தென்னவனே! யென்னை
மன்னிப்பீ ரேனிந்தக் கோபமே? எழை
என்ன பிழை செய்தேன்? எந்தலே!
சொன்னவிதம் பரி நண்ணின முற்றிலும்
சிந்தை மகிழ்ந்தனிர் செம்மலே!

அரசன்:—

(மோகனம்; சாப்பு.)

இதுவோ உனது நேமம்? இதுவோ உனது நிஷ்டை?
சதிகாரனே! இது தூய்மையொ? சாற்றும்
சாஸ்திரத்திற் கற்ற வாய்மையோ?
கும்பிடுங்கள்ளனே! எத்தனே! பித்தனே!
கொள்ளை கொள் மூர்க்கனே! தீயனே!

ஏ வாதவூரனே! நீ என்னுடைய பொருட்களையெல்லாம் கொண்டுபோய் நல்ல குதிரை வாங்கி வந்தாய்! உன்னைப் போன்ற மந்திரி யிருந்தால், ராஜ்யமும் நிலைநிற்கும்; உன்னை நம்பிய அரசனும் வாழ்ந்து போவான்.

வாத:—வேந்தே! குதிரைகளுக் கென்ன குற்றம்?

அரசன்:—(மிகுந்த கோபத்தோடு).

(விருத்தம் - இராகம்: சங்கராபரணம்.)

எதடா! கயவா! பேதா யெத்தனை யுரைத்து முன்றன்
சூதைநீ விடுத்தா யில்லை சூனிய மியற்றுந் தீய
பாதகப் பதரே! நின்னைப் பார்த்தாலுங் கொடிய தீதாம்;
காதகச் சிதடா! நின்னைக் கழுவினுக் குணவா யீவேன்.

அடே கும்பிடுங் கள்ளா! குழைத்திடுங் கள்ளா! என்ன சொன்னாய்! குதிரைகளுக்கு என்ன குற்றமா! குற்றமொன்றுமில்லை. யாவும் சுய ரூபத்தை யடைந்து விட்டன. ஆகா! என்ன உன்

னுடைய துணிபு! காட்டிலிருக்கும் நரிகளையெல்லாம் உன்னு டைய சூனிய வித்தையால் குதிரைகளாக்கிக் கொணர்ந்தாயல் லவா! ஜாலவித்தை கற்றவன் அதை நன்ருகக் கற்கவில்லையே! அவைகள் நேற்றிரவே நரிகளாக மாறி உன்னை ஏமாற்றிப்போய் விட்டனவே! அதற்கென்ன சொல்கிருய்? அவைகள் போனது மன்றி, முன்னிருந்த குதிரைகளையும் கடித்து சின்னுபின்ன மாக்கி, இரத்தமொழுக, நிணங்கள் சிதறக், குடர்களையும் கடி த்துக் காயம் பண்ணிக் கொன்றுவிட்டு, நகரத்திற்குள் நுழைந்து அங்கும் பற்பல அனர்த்தங்களை விளைவித்து விட்டு, காட்டுக்குப் போய்விட்டன. உன்னுடைய எக்ஷிணி வித்தை நன்ருக இருக் கிறது! மெச்சினேன்! நீ முன்பு, கண்ணும் இமையும் போல, என்னுடைய காரியங்களைப் பார்த்து வந்ததன் உட்கருத்து, சம யம் பார்த்து என்னுடைய பொருள்களை அபகரிக்க வேண்டு மென்பதல்லவா? ஆகா! நீ உயர்குலமாகிய பிராம்மணர் மரபி லுதித்து பரிசுத்தனென்னும் பேருங்கொண்டாயே! உன்னு டைய புத்தி இப்படிப் போகுமா! உன்னை உயிரோடு வைப் பதே தவறென்பது தோன்றினும்,உனது உயிரை வாங்குவதற்கு மாத்திரம் எனக்கு மனம் வரவில்லை. வீரர்களே! இந்த மந்திரவாதியை நன்ருக வதைத்து, எங்கும் போகவிடாமல் மடக்கி, நம்முடைய பொருளையெல்லாம் வாங்குங்கள்; கொஞ்ச மும் மனவிரக்கம் கொள்ளப் போகிறீர்கள்; ஜாக்கிரதை.

[வாதவூராரையும், வீரர்களையும் விடுத்து அரசன் முதலியோர் போய்விடு கிருர்கள்; வீரர்கள் அவரைப் பிடி த்துக்கொண்டு மூலைக்கொருவராக இழுத்து அப்பால் கொண்டு போகி ருர்கள்.]

1 வீ:—வா; ஐயா! இப்பிடி;

[உபத்திரவிக்கிருர்கள்.]

2 வீ:—இந்தா! இதுவரெயிலே மரியாதெ பாத்தோம். இனிமே பலிக்காது. பேசாமெ பணத்தெப் போட்டுடு. இல்லாமெப் போனு நரவந்தான்.

3 வீ:—எங்களை என்னன்னு பாத்துக்கிட்டே? அந்த எமனே இருந்தாலும் மறிச்சு சணநேரத்துலே பணத்தைக் களட்டிடமாட்டமா; ஒன்னேடை பாச்சா இங்கிட்டுப் பலியாது; என்ன சொல்றே?

வாத:—(வருந்தி ஒருபுறமாக) ஆகா! முன் ஜென்மத்தில் நான் செய்த பாவத்தின் பலன் இன்னும் பூர்த்தியாகவில்லைபோ லிருக்கிறதே! நான் எவ்வளவு கொடிய பாதகம் செய்தவனுக இருக்கிறேன்! பாவியுடலே! படு. பாழும் மனதே! படு. எனக்குப் பதிலாக இந்த வேதனைகளை யநுபவிக்க வேறு எவர் வருவர்? முன் ஜென்மத்தில் பெண்டுபிள்ளைகள் சுற்றத்தார் என்னும் பற்றினுலும், உலக வின்பங்களின் ஆசையினுலும், 'என்னுடையது' 'என்னுடையது' என்று பொருள், வீடு, நிலங்கள் முதலியவற்றை சம்பாதிக்கும் முயற்சியினுலும், நான் என்னென்ன பாவங்களை இயற்றினேனே! அப்போதிருந்த மனிதரும், தேடிய பொருளும், அநுபவித்த போலி இன்பமும் இப்போது என்னேடு வரவில்லையே! அதன் பயனுகிய பாவமூட்டை மாத்திரம் என்னேடு வந்திருக்கிற தென்பதை இப்போது நிதரிசனமாகக் கண்டநுபவித்தும், இந்தப் பிறப்பிலும், பழைய மாதிரியே செய்ய மனம் தூண்டுகிறதே! இதைப் பார்க்கிலும் அதிக மடமை வேறுண்டோ?

3 வீ:—அடே! ஐயரே! இந்தப் புராணத்தை யெல்லாம் கட்டி அப்பாலே வை; இந்தா! நாஞ் சொல்றத்தெக் கேளு; அந்தச் சரக்கெல்லாம் இங்கிட்டு வெல்லபோவாது. பேசாமே பணத்தைக் களட்டிடு.

2 வீ:—அடே! பாப்பான் வளிக்கு வரமாட்டான்டா; அவனைக் கொலை பண்ணினக்கூட சொம்மாத்தான் இருப்பான்டா! கொடலு அளுத்தக்காரன்டா! நெஞ்சு தகிரியம் தாஸ்திடா இவுனுக்கு; இந்த வெய்யில்லே நெறுத்தி, சூரியனெப்பாக்க வச்சு, அப்பிடியே நெத்திமேலே ஒரு கல்லெ வையுங்கடா?

4 வி:—அடே! என்டா கெட்டுப்போறீங்க? சாமீடா; பூண்டத்துப் போவிங்கடா; பிராமணத்வேசம் கொலநாசம்டா; அநியாயமா அளிஞ்சு போவாதிங்கடா; மரியாதையாக் கேளுங்கடா.

1 வி:—அடே போடா! பைத்திக்காரா! பாப்பான் இவுனுக்கும் சொக்குப்பொடி போட்டுட்டான்டா; கல்லெ வைக்கறதுதான் சரி.

(ஒரு பெருத்த கல்லை நெற்றியில் வைக்கிறார்கள்.)

வாதவூரர்:—(மிக்க மனதிளக வருந்தி ஈசுவரத் தியானம் செய்கிறார்.)

(இராகம் - நாதநாமக்கிரியை.)

படமுடியா தினித்துயரம் படமுடியா தரசே!
பட்டதெல்லாம் போதுமிந்தப் பயந்தீர்த்திப் பொழுதென்
னுடலுயிரா தியவெல்லாம், நீ யெடுத்துக் கொண்டுன்
னுடலுயிரா தியவெல்லா முவந்தெனக்கே யளிப்பாய்
வடலுறசிற் றம்பலத்தே வாழ்வாயென் கண்ணுள்
மணியே! என் குருமணியே! மாணிக்க மணியே!
நடனசிகா மணியே! என்னவ மணியே!
நன்மணியே! பொன் மணியே! நடராஜ மணியே!

ஹே! கருணைவள்ளலே! கண்ணுதலே! கங்கை வேணியனே! கபாலியே! காம நாசனே! கறைமிடற்றண்ணலே! கங்காளனே! இவையாவும் உன்னுடைய திருவுளத்திற்குச் சம்மதமானவையோ? இந்த ஏழைபடும் இன்னல் சர்வக்ஞனை உனக்குத் தெரியாதென்று சொல்லத் தகுமோ! ஏழையின் உடலும், மனமும் புண்பட்டது போதாதோ! என்னை வதைத்துப் பரிசுத்தமாக்கியது முடியவில்லையோ! ஹே! திரிபுராந்தகா! திரியம்பகா! திவ்ய தேஜோமயஸ்வரூபி! தேசிகனே! மங்கை பாகா! மானிடமேந்தியே! குன்றவில்லியே! கூற்றை யுதைத்தோனே! கோமளாங்கனே! கொன்றை யணிந்தோனே! என்னப்பனே! இந்த ஏழையின் முகத்தைப் பார்க்க மாட்டாயோ! இனியேனும் உனது கருணை நோக்கம் ஏற்படாதோ! ஏழையேனை இந்தத்

துன்பக் கடலிலிருந்து விடுவித்து ஈடேற்ற மாட்டாயோ! ஹே! ஸ்தாணுவே! சங்கரா! சம்புவே! நம்பனே! உமாபதி! சந்திர சேகரா! ஜடாமகுடதாரீ!

[அப்படியே சோர்ந்து மூர்ச்சிக்கிறார்; ஜனங்களின் கூக்குரல் கேட்கிறது.]

1 வீ:—(திடுக்கிட்டு) அடே! என்னடா இது அமக்களமா இருக்குது!

2 வீ.—சனங்க கூச்சப் போட்றாங்களே; என்ன நடந்திச்சோ தெரியலியே!

ஜனங்கள்:—(தூரத்தில்) ஐயோ! மகாராசா! ஐயோ! மகாராசா! வெள்ளம் பெருகுதே! வைகையாறு ஊருக்குள்ளே வந்துடிச்சே! சாமானெல்லாம் அடிச்சுக்கிட்டுப் போவுதே! ஐயோ! ஐயோ! புள்ளெகுட்டிங்கள்ளாம் போயிடும்போலிருக்குதே! ஊரெல்லாம் ஜலமாப் போச்சே! தெருவெல்லாம் ஆறு ஓடுதே! வீட்டுக்கெல்லாம் வந்துடுச்சே! வீடுகள்ளாம் உளுந்துடும்போ லிருக்குதே! இந்த ஊருக்கு என்ன கேடுகாலமோ தெரியலியே! நேத்து நரி வந்து ஊரெ அளிச்சுது; இன்னக்கி வெள்ளம் பெருகுது. மகாராசா! ஊரு பாளாப்போயிடுமே!

3 வீ:—(பயத்தோடு) ஐயயோ! என் ஊடு ஆத்தோரத்துலே இருக்குதே! அது இருக்குதோ போயிடுச்சோ தெரியலியே!

மற்ற வீர:—(கவலையோடு) எங்க ஊடு என்ன ஆச்சோ தெரியலியே! என்னடா பண்ணப்போறோம்! அதென்னடா பறை சாத்தறாங்களே! என்னன்னு கேப்போம். கம்மினு இருங்க.

பறை சாற்றுகிறவன்:—துடும் துடும் துடும் துடும்:—இதனால் சகலமான ஜனங்களுக்கும் தெரிவிப்பதென்ன வென்றால், வைகையாற்றில் வெள்ளம் கரைபுரண்டு ஊருக்குள் வருவதைத்தடுத்து உடனே அணைபோட வேண்டுமாதலால், அதற்கு, வீட்டிற்கு ஓர் ஆள்வீதம் ஒவ்வொரு வீட்டாரும் அனுப்பவே

ண்டும். அவரவர்களுக்கு அளந்து விடப்படும் இடத்தில் அவரவர்கள் உடனே அணைபோட வேண்டும். அப்படிச்செய்யத் தவறுகிறவர்களை சிரச்சேதம் செய்யப்படுமென்று இராஜனுடைய கண்டிப்பான உத்தரவு பிறந்திருக்கிறதை அறிய வேண்டியது. துடும் துடும் துடும் துடும்.

4 வீ:—அடே! அண்ணே! வாங்கடா; போவோம்.

மற்றவர்:—நம்மபொஞ்சாதி புள்ளெங்க கதி என்ன ஆச்சோ! வாங்க போவோம்.

[வீரர்கள் வாதவூரரைக் கவனியாமல்
அப்படியே விட்டுப்போகின்றனர்.]

வாத:—(தெளிவடைந்து தனக்குள்) என்னப்பனே! புரமூன்றெரித்தவா! புலித்தோலணிந்தவா! ஏழையைக் காப்பாற்ற வந்தவா! உன் அடியார்க்கடியனான என் அபயக்குரல், உன் திருச்செவிகளுக் கெட்டியதோ! என் மனம் படும்பாடு உன் திருவுளத்திற்குப் புலனாயிற்றோ? பசுபதி! பவநாசகா! பரசுபாணி! தித்திங்கும் தீங்கரும்பே! தெள்ளமுதே! உத்தமனே! முத்திக்கு வித்தாகும் உன்னுமத் தோத்திரத்திற்கு எத்திக்கும், எப்பொருளும், எவ்வுலகும் ஈடாமோ! எத்தனையோ கோடி வாய்கள் கொண்டு உன் மகிமையை எத்தனையுகந் துதிக்கினும் மனம் திருப்தியடையுமோ?

[மெய்ம்மறந்து நிற்கிறார்]

---

## இரண்டாவது காட்சி.

இடம்:—பிட்டுவாணிச்சியான வந்தியின் வீடு.

காலம்:—பகல்.

[வந்தி அதிக அச்சத்தோடு கையைப் பிசைந்துகொண்டு விசனித்து நிற்கிறாள்.]

சாமீ! ஆண்டவனே! சொக்கநாதா! நான் என்ன செய்யப் போறேன்! ஒரு ஆள்கூட அகப்படல்லியே! எனக்கு அளந்து

விட்ட பாகத்துலே நான் என்னமா அணைபோட்டு முடிக்கப் போறேன்! சாமீ! ஈசுவரா! தள்ளாத காலத்துலே என்னாலே இந்த வேலெசெய்ய முடியாதே; இதுவரையிலே எனக்கு ஒரு தும்பமுமில்லாமெ காப்பாத்தினியே; இந்த சமயத்துலே இந்த ஏளெக் கிளவியெ மறந்துட்டியா? சாமி! சந்திரசேகரா! நான் ஒன்னெ ஒரு சணங்கூட மறந்ததில்லியே யப்பா! தெனந்தெனம் சுட்ற புட்டையெல்லாம் ஒனக்கு நிமித்தியம் சேஞ்சுதானே விக்கிறேன்; எங்கப்பனே! என் ஆநந்தத்தேனே! நீ கண் தொறந்து இந்த ஏளெயொட தொயரைப் பாக்கமாட்டியா! எனக்கு ஆருந் தொணையில்லியே; பந்து சனம், மக்கள், ஒதவுவோர் ஒருத்தருமில்லியே; வளி தெரியாமெத் தத்தளிக்கும் இந்த ஏளெ மேலே எரக்கம் வச்சு இந்த ஆபத்துலே வந்து காப்பாத்த மாட்டியா! ஆண்டவனே! தெய்வமே!

விருத்தம்—இராகம்: ஆநந்த பைரவி.

*துணையின்றி மக்களின்றித் தமரின்றிச் சுற்றமாகும்*
*பிணையின்றி யென்றுகொள்வார் பிறரின்றிப் பற்றுக்கோடாம்*
*புணையின்றித் துன்பத்தாழ்ந்து புலம்புறும் பாவியேற்கின்*
*றிணையின்றி யிந்தத் துன்ப மெய்துவதறனோ வெந்தாய்!*
*தேவர்க்கு மரியனாகுந் தேவனே! அன்பராவார்*
*யாவர்க்கு மெளியனாகு மீசனே! வேந்தனாணைக்*
*காவற்செங் கோலாற்சிற்றங் கடுகுமுன் கூலியாளா*
*யேவற்செய் வாரைக்காணே னேழையேனினி யென்செய்கேன்?*

ஏ சொக்கநாதா! அடியவருக்கு எளியவனான கடவுளே! கூலியாளே கெடைக்கலியே; இன்னும் கொஞ்சநேரம் போனா, ராசா, தலெயெ வாங்கிடுவானே; அப்பா! சாமீ! சுந்தரமூர்த்தீ! சொக்கநாதா! இந்த ஏளெக்கி எரங்க மாட்டியா?

[அழுகிறாள்; ஈசுவரன் கூலியாளைப்போல உருமாறி, இடையில் அழுக்குப் படிந்த கந்தைத் துணியைத் தரித்து, தலையில் சும்மாடிட்டு, அதன்மீது ஒரு கூடையைக் கவிழ்த்துக் கொண்டு தோளில் மண்வெட்டியோடு வருகிறார்.]

(நந்தன் சரித்திரம் பழன மருங்கணையும் என்ற
தொண்டிச்சிந்தின் வர்ணமெட்டு.)

ஈசு:—

(1) கரைபோடும் வேலையுண்டோ? கூலிக்
காக எப்பாடும் படுவேனையா ?

(2) விரைவாக வேலை செய்வேன்; மண்ணை
வெட்டிடுவே னென்றுக் கொட்டிடுவேன். (அம்மா-கரை)

(3) உயர்வான மேடுகளை யழித்
தோர் நொடியிற் பள்ள மாக்கிடுவேன். (ஐயா-கரை)

(4) உயராத தாழிடத்தை மெத்த
உன்னதமாக நிமிர்த்திடுவேன். (அம்மா-கரை)

(5) மண்ணே யெனதுயிராம்—அதை
மாற்றல் அழித்தலென தணவாம் (ஐயா-கரை)

(6) கண்ணனைவரிருவர்—துயர்
போக்கவர்தேனுயிர் காக்கவந்தேன். (அம்மா-கரை)

கூலியாளையா ! கூலியாளம்மா ! கிணறு தோண்டறது, மண்வெட்டறது, கரைகட்டறது, கூலியாளையா கூலியாள். வேலை யிருக்குதோ வேலை. கிணறு தோண்டறது, மண்வெட்டறது, கரை கட்டறது, வயல் வெட்டறது. கூலியாளம்மா ! கூலியாள்.

வந்தி:—(திடுக்கிட்டு) ஆகா ! இதுவும் பாக்கியந்தான் ; எம் வயத்துலே அந்தச் சொக்கநாதன் இப்பதான் பாலு வாத்தான்; அதோ ஒரு கூலியாள் வந்துட்டான் ; நல்லதாச்சு ; அப்பா ! ஆரப்பா அது ? அடே கூலியாளே ! இங்கே வா.

ஈசு:—பாட்டீ ! வந்தேன் பாட்டீ ! என்னெ ஒனக்குத் தெரியாதா ? தெனந்தெனம் ஒம்புட்டுத் தின்னு வளந்தவனுச்சே ! தெனம் நீ பிரியமாக் கொடுக்கற புட்டெத் திங்காமெப்போனு நான் செத்து பூட மாட்டேனு ! பாட்டீ ! என்னெப் பாத்தா யாருன்னு தெரியலியா ? நான் புட்டுக்கு விங்கின பேராண்டியல்லவா ?

வந்தி:—அப்பா ! அதெல்லாம் இருக்கட்டும் ; எனக்கு நீ அவசரமா ஒரு வேலை செய்யனும் ; ராசா எனக்கு அளந்துவுட்ட எடத்

திலே கரெ இன்னக்குள்ளற போடணும். போட்டுக் குடுப்பி யா ?

ஈசு:—இத்தானு பெரமாதம்! இதோ சண நேரத்துலே முடிக்கறேன் பாட்டீ! அதெப்பத்திக் கவலெப்படாதே; ஓம் மனசுபேலெ சேஞ்சா, என்னு கூலி தாறே பாட்டீ?

வந்தி:—அப்பா! இப்பொ எங்கையிலே ஒரு காசுகூட இல்லே; நீ போயி வேலெயெ முடிச்சுப்புட்டுவா; ஒனக்கு எத்தினி புட்டு வேணுமானாலும் தாறேன். நீ நல்லா இருப்பே மவ ராசா! ஒனக்கும், ஓம்புள்ளெ குட்டிங்களுக்கும் ரொம்பப் புண்ணியம்.

ஈசு:—அம்மே! நான் நேத்துக் காலேமெல ஓம்புட்டுத் தின்னது. வவுறு பசிக்குது. கூலி ஆப்புடாமெ என் பொஞ்சாதி புள்ளெயெல்லாம் பட்டினி; மொதல்லே கொஞ்சம் புட்டுக் குடுத்தீன்னு, அதைத் தின்னு பசியாறி, ஒடனே போயி, ஓம் வேலெயெ முடிக்குறேன் பாட்டீ!

வந்தி:—அப்படியானு சரி; இதோ தாறேன்; சாப்பிடப்பா!

[கிழவி வீட்டிற்குள்போய் உதிர்ந்த பிட்டுகளை அள்ளிக் கொணர்ந்து கொடுக்கிறாள்.]

வந்தி:—புட்டு இதோ இருக்குது; சீக்கிரம் பசியாத்திக்க.

ஈசு:—(இடுப்புத்துணியை அவிழ்த்துக் குனிந்து மரியாதையாக ஒரு மூலையில் வாங்கி வைத்துக்கொண்டு ஆவலோடு ஒரு கை எடுத்துத் தின்கிறார்.) பாட்டீ! நீ நல்ல மவராசி; புண்ணியவதி. ஓம் புட்டெத் தின்னு தின்னு என் வவுறு குளுந்த மாதிரி ஓம்மனம் குளிர அந்த ஆண்டவன் பண்ணுவான். (இன்னொரு கை தின்கிறார்) புட்டு நல்லாயிருக்குது ஆச்சி! ஒன்னுடெ பிரியம் ஒண்ணே போதுமே; கலுக்கண்டு பேலெ இனிக்கிதே. அந்த ஈசுபரன் ஒனக்குக் கட்டாயமா மோச்சங் குடுப்பான் ரோசிக்

காதே. (மேலும் தின்று சந்தோஷத்தினுல் தலையை அசைத்து, முழங்கைகளால் இரண்டு விலாக்களிலும் அடித்துக் கொண்டு). அம்மே! எம்பிட்டுருசி! இது அந்தச் சொக்கப் பனுக்கே.ஆகும்! அப்பன் ஆத்தா ஒருத்தரு மில்லாமெ அநாதியா வந்த எனக்கு ஒரு தாய் பேலெ அம்போடெ புட்டுக் குடுத்து எம்பசியைக் போக்கினியே. ரொம்ப சொகமாச்சு. இந்த ஆத்துமா கடைத்தேறிப் போச்சு. இந்தக் கட்டெக்கி இது நல்ல காலம். நேரமாச்சு; உத்தரவு குடு பாட்டீ! நான் போயி ஒம்மனசு சந்தோசம் அடையருப்பலே வேலெ செய்யறேன்.

வந்தி:—அப்பா! தம்பீ! கடியாப்போயி ராசாவுக்குக் கோவம் வராமெ பாத்துக்கோ. ஒடனே வேலெயெ முடி. இன்னம் புட்டு ரொம்பத் தாறேன்.

ஈசு:—பாட்டீ! மனசுலே கவலெ வைக்காதே. போயி ஒம் வேலெ யெத்தான் மொதல்லெ முடிக்கப்போறேன். ஓம் மனசுக்கும், ஆத்துமாவுக்கும் ஆநந்தம் உண்டாக்கறேன்.

[ஈசுவரன் குனிந்து வணங்கிவிட்டுப் போகிருர்,]

---

## மூன்ருவது காட்சி.

இடம்:—வைகையாற்றின் ஒரு பக்கம்.

காலம்:—அப்போது.

[சில ஆட்கள் வேலை செய்கிருர்கள்; ஒரு சேவகன் வேலை வாங்கிய வண்ணம் கையில் சவுக்கோடு நிற்கிருன்.]

சேவ:—ஆடே ஆள்களா! வேலெ துடியா ஆவட்டும். நிக்காதீங்க.

ஈசு:—அப்பாடா! மெத்தக் களையா வருதுங்கறேன். (மண்ணோடு தட்டைத் தலையிலிருந்து கீழே போடுகிருர்) கண் ணு கிருகிருன்னு சுத்துதுங்கறேன். மயக்கம் வருதுங்கறேன்.

சேவ:—ஆருடா உளுந்தவன்?

வேறொரு ஆள்:—அவந்தாய்யா புட்டுக்காரி ஆளு.

சேவ:—(ஈசுவரனிடம் வந்து) அடே தூக்குடா சோமாறி! ஆள் வாட்டசாட்டமா ஒளுங்கா இருக்கறே. ஒடம்பு மொளுமொளுன்னு வள்ளிக்கிளங்கு மாதிரி இருக்குது. வேலெ செய்யறத்துக்கென்ன கேடு?

ஈசு:—(புன்சிரிப்போடெழுந்து) இல்லெசாமி; மண்ணு கனம் தாங்காமெயில்லெ; காலு தடுக்கி உளுந்துட்டேன். கோவிச்சுக்காதீங்க ஐயா!

சேவ:—சரிதான் போடா தடியா! சொம்மா நிக்காதே; வேலெயெப்பாருடா.

ஈசு:—இதோ நொடிலே ஆச்சு. பாருங்களேன்.

[அப்பால் போய் இரண்டொரு கூடை மண்ணெடுத்த பிறகு, கூடையை ஆற்றில் விட்டு விடுகிறார்.]

ஈசு:—ஐயா! ஐயா! கூடெ! கூடெ! ஆத்தோடெ போவுது! ஆத்தோடெ போவுது! அடே அண்ணே ஓடுங்கடா! ஓடுங்கடா!

[ஈசுவரன் ஆற்றில் விழுந்து நீந்திப்போய்க் கூடையை எடுத்து வருகிறார்.]

ஈசு:—அடாடா! கூடெயெல்லாம் நனெஞ்சு போச்சுங்கறேன். மண்ணு ஒட்டிக்குமே; ஈரத்தெக் கீளே தட்டுவோம் (ஓங்கித் தட்டுகிறார்.) அடெ பாளாப்போன கூடெயே! கட்டுக் களண்டு போச்சே! அடெதொல்லெயே! இத்தெக் கட்டித் தொலெக்கறேன்.

[கட்டியவண்ணம் நிற்கிறார்.]

சேவ:—அடே களுப்புணி! என்னடா பாசாங்கு பண்ணறே! போடா, போடா, வேலெ ஆவட்டுண்டா; மத்தவங்க என்னமா வேலெ செய்யறாங்க. நீ சொம்மாக் காலத்தெ ஓட்டுறியே; ஓம்பா

வத்துலே இன்னும் ஒருகூடெ மண்ணுகூடப் போட்டல்லி யேடா.

ஈசு:—(புன்சிரிப்போடு) இருக்கட்டுஞ்சாமி; இதோ பாக்கடிக்கற நேரத்துலே முடிச்சுத்தாரேன்.

[எழுந்து அங்குமிங்கும் சுறுசுறுப்பாகப் போய்வேலை செய்வதாகப் பாசாங்கு செய்கிறார்.]

ஈசு:—இதென்னடா சனியன்! மம்புட்டிக் காம்பு களண்டு போச்சே! அடெ ஒவித்திரியமே! இதுக்கு ஆப்பு வச்சு இறுக்கித் தொலெக்கறேன்.

[கீழே உட்கார்ந்துகொண்டு தட்டிக் கொட்டி மண்வெட்டியை சரிப்படுத்திக்கொண்டு எழுந்து பெருமூச்சு விட்டவண்ணம் வேலை செய்கிறார்.]

சேவ:—அடே! ஆவட்டும் ஆவட்டும். நிக்காதிங்க. நானு அந்நாண்டை போயிப் பாத்துப்புட்டு வாறேன். அடே! வெறுந்தடியா! நானு வாரத்துக்குள்ளற ஒம் வேலெயெ முடிச்சு வைக்கணும்; பாத்துக்கோ. இல்லாமெப்போனு முதுகுத் தோலெ உரிச்சுடுவேன்.

ஈசு:—வேலெயெ இதோ முடிக்கறேன் சாமி! கவலைப்படாமெப் போங்க.

[சேவகன் அப்பால் போய்விடுகிறான்.]

ஈசு:—அடே அண்ணமாரே! எம் வேலெ இன்னும் கொஞ்சுண்டு தான் இருக்குது. நானு ஒங்களுக்கு மண்ணு கொட்டறேன்.

வேறொருகூலி:—எங்களுக்குச் சேஞ்சா ஒம் வேலெ ஆவல்லேன்னு சேவரையா கோவிச்சுக்குவாரே.

மூசு:—செவ்ரையா வாறபோது பாத்துக்குவோம்.

[இரண்டு மூன்று கூடை மண்ணை மற்றவர் பாகத்தில் கொட்டுகிறார்.]

ஈசு:—உஸ் அப்பாடா! எம்பிட்டு வேர்வெ ஒளுகுதப்பா! ஒடம்பெல்லாம் கைகாலெல்லாம் உட்டுப்போவுதுங்கறேன். கொஞ்சூண்டு இந்த மாத்தடிலே இந்தக்கட்டேயெப் போடாமெப்போனா சரிப்படாதப்பா; செவரையா திட்டினாலும் சரி; அடிச்சாலும் சரி; அவன் குட்டிச்செவராப் போனாலும் சரி. நான் தூங்கித்தான் எளுந்திருப்பேன்.

[கூடையைத் தலையின்கீழ் வைத்துக்கொண்டு படுத்து சற்று நித்திரை செய்கிறார்.]

வேறொரு கூலி:—அடே! செவரையா வரப்போறாண்டா; சாக்கிருதேடா.

ஈசு:—(விழித்தெழுந்து கொட்டாவிவிட்டு) அப்பாடா! வவுறு நெருப்பாப் பசிக்குதுங்கறேன். வந்திப்பாட்டி புட்டுமேலே ஆசெ போவுதுடா; அடே அண்ணமாரே! நீங்க வேலெ செய்யுங்க; நான் போயிப் புட்டுத் தின்னுப்புட்டு, ஒங்களுக்கும் வாங்கியாறேன்.

[போய்ச் சற்று நேரத்தில் பிட்டைத் துணியில் வாங்கிக் கொண்டு வருகிறார்.]

ஈசு:—அடேடே! சுடுதுடா! சுடுதுடா! இப்பதான் அடுப்புலேருந்து எடுத்தாடா. சூடு கையெ வைக்க முடியல்லேடா. ஆசை கேக்கல்லேடா. நாக்குலே தண்ணி ஊறுதுடா. இதோடே வாயி போனாலும் சரி; இருந்தாலும் சரி. போட்டுக்கறதே சரி. (கையுஞ்சுட வாயுஞ்சுட ஒரு கையெடுத்து வாயில் போட்டுக் கொள்ளுகிறார். சூட்டைப் பொறாமல் இரண்டு கைகளாலும் தாடைகளைப் பிடித்துக்கொண்டு குதிக்கிறார்) உஸ்! அடாடாடா! சுட்டுப்

பிடிச்சுடா என்ன ருசிடா! இந்தாடா! நீங்களும் தின்னுங் கடா,

[மற்றவருக்குக்கொடுக்க அவர்களும் தின்கிறார்கள்.]

1 கூலி:—(மற்றவரைப் பார்த்து). எம்பிட்டு நல்லவண்டா இவன்!

2 கூலி:—வேலெ மாத்தரம் செய்யமாட்டான். மத்தப்படி நல்ல வந்தான்டா.

3 கூலி:—இவன் ஒடம்பு மெலுக்கானதுடா; இந்த மொரட்டு வேலெயெ என்னமாடா செய்வான்?

1 கூலி:—ஒடம்பு பளபளன்னு சித்தனெப்பேலெ இருக்கறுண்டா!

2 கூலி:—(புன்சிரிப்போடு) சித்தன் இல்லே. பிசாசு புடிச்ச பித்தன்னு சொல்லுடா.

3 கூலி:—ரெண்டும் இல்லேடா! கிளவியை ஏமாத்திப் புட்டுத் திங்க வந்த எத்தன்டா.

ஈசு:—(புன்சிரிப்போடு). அடேடே! அப்படியெல்லாம் சொல்லாதிங்கடா. நான் சுத்தன்டா! அடே இந்நேரம் வேலெ சேஞ்சமே; வாங்கடா கொஞ்சுண்டு பாட்டுப்பாடுவோம்.

2 கூலி:—நீதான் ஒரு பாட்டுச் சொல்லேன். எங்களுக்குப் பாடத் தெரியாது.

ஈசு:—

(காவடிச்சிந்து. சந்தவரை வந்த குநாதா என்ற பாட்டின் வர்ணமெட்டு.)

1 ஒன்றிரண்டு பொன்றிரண்டு நான்கு நிறை
மூன்றிரண்டு மூவிரண்டு மேழு எழுத்
தெட்டுடைய ஒன்பதேனும் பத்து
பதினொன்று பன்னிரண்டு அதை
எட்டிடுவோர் யாவரினும் முத்து

2 பெண்ணுமது ஆணுமது அன்று வினைத்
தெண்ணுவது மெண்ணரிது மென்று முள
விண்ணுமது மண்ணுமது நன்று
பதியொன்று கதியென்று பதம்
பற்றுமவர் பெற்றிடுவர் சென்று

1 கூலி:—அடே! எம்பிட்டுச் சோக்காப் பாட்ருங்கறேன்.

2 கூலி:—இன்னம் ரவையூண்டு பாட்ரு.

3 எங்குமொளிந் திருக்கும் கள்ளன் அவன்
எத்தகைக் கபடமுள்ள குள்ளன் தன்னைத்
தோத்திரம் புரிபவர்க்கு உள்ளன்
புகொள்வள்ளன்மையன் நல்லன் மனத்
தென்றுநினைக் காதவருக் கல்லன்
4 பித்தநிறை சித்தமுள்ள பேயன் மிக
எத்தனவ னெண்ணரிய மாயன் இங்கு
பாவியர்க்குதவிசெய்ச காயன்
அவர் நேயன் பெருங்காயன் முனம்
பெண்ணொருத்திக்காக வந்த சேயன்

கூலி:—அடே! செவரையா வந்துட்டாருடா; எளுந்திருங்கடா.

[சேவகன் வருகிறான்—யாவரும் எழுந்து வேலை செய்யுமிடத்துக்குப்போய் விடுகிறார்கள். ஈசுவரன் அலட்சியமாக மெல்ல எழுந்திருக்கிறார்.]

சேவகன்:—(தனக்குள்) என்ன அரிசியங்கறேன்! அரைக்கற அரிசியெ விட்டுப்புட்டு சிரிக்கற சின்னப் பையனோடெ வெளையாடினாளாம் இன்னு சொலவம் சொல்லுவாங்களே; அது பேலெ இருக்குதே! அடே! நீ என்ன மொதல்தரப் போக்கிரியா இருக்கிறியே! நீ கெட்டது மில்லாமெ மத்தவங்களையும் கெடுக்கப் பாக்கறியா? அவுங்களோடெ வேலெயெல்லாம் அநேகமா முடிஞ்சுபோச்சு; ஓம் வேலெ அப்பிடியே இருக்குதேடா; எப்பொ

செய்யறது? நம்ப மவராசா பாக்க வரப்போருரே; நீ இப்பிடிச் சோம்மா இருந்தா ஒன்னெடெ கண்ணேப் புடுங்கிடுவாரேடா; போடா; வெறுந்தடியா! இன்னமே இப்பிடிக் களுப்புணித்தனம் பண்ணினின்னு கன்னத்தெ நொரவிடுவேன். போடா! எருமைமாடே!

ஈசு:—(புன்சிரிப்போடு வணங்கி) இருக்கட்டுஞ் சாமி! மத்தவங்க வேலே ஆவரத்துக்குள்ளற என்னுடெ வேலெதானு ஆகாமெப் போவுது நீங்க பாருங்களேன், மவராசா வந்து எம்மேலெ சந்தோசப்பட்டு எனக்கு எனுங்குடுக்கப்போருரு. அதுலே ஒங்கிளுக்கும் கொஞ்சுண்டு பங்கு தாறேன்; ரோசனே பண்ணுநிங்க.

சேவ:—போடா! அதனப்பிரசங்கி! கையாலே ஒண்ணும் ஆகாமெப் போனுலும் சோம்மா மோள நீளம் பேசுறியா; போடா வேலெசெய்டா! சோமாறி நாயே!

[ஈசுவரன் வேலேசெய்ய அப்பால் போகிருர். அப்போது அரசன், இரண்டாவது மந்திரி, இருவரும், கட்டியக்காரர், வீரர்கள், முதலியோருடன் வருகின்றனர்.]

சேவ:—மவராசா! தெண்டம்.

[குனிந்து வணங்குகிறான்.]

அரசன்:—(அதட்டி) அடே! இந்தப்பக்கத்து வேலே யெல்லாம் முடிந்ததா?

சேவ:—(நடுநடுங்கி) ஆச்சு-இல்லெ-ஆச்சு-ஆனல்.

அரசன்:—(அதட்டி) என்னடா பிதற்றுகிருய்? ஆச்சாவது? ஆனலாவது? என்னடா உளறுகிருய்?

சேவ:—எல்லாம் அடெச்சாச்சு. ஒரு வூட்டுப் பங்கு இன்னும் அடெ படல்லெ.

அரசன்:—(கோபத்தோடு) ஏன் அடைபடவில்லை? யாருடையது?

சேவ:—புட்டு வாணிச்சி வந்தியொடெ பாவம் இன்னும் முடியல்லெ; அதுதான் கொஞ்சூண்டு பாக்கி இருக்குது. அதுக்கு வேலெ செய்ய ஒரு ஆளு வந்திருக்கருன். அவன் சரியா வேலெ செய்யாமெப் பாசாங்கு பண்ணருன் மவராசா!

அரசன்:—எது அந்தப் பாகம்? காட்டு பார்க்கலாம்.

சேவ:—இதோ இருக்குதே இதுதான்.

[காட்டுகிருன்.]

அரசன்:—(கோபத்தோடு) அடாடா! இதன் வழியாக வருகிற வெள்ளம், அடைபட்ட மற்ற பாகத்தையும் அறுத்துக்கொண்டு போகிறதே! சேவகப்பதர்களா! ஒழுங்காக வேலை செய்யாமல் தூங்குகிறீர்களா? ஊர் அழிந்துவிடும்போலிருக்கிறது; கொஞ்சமும் கவலையில்லாமல் ஒருவன்மேலொருவன் கோள்சொல்லிக்கொண்டலைகிறீர்களா? இதோ பார் உன்னுடைய முதுகுத் தோலைப்பியத்து விடுகிறேன்.

[அரசன் பொற்பிரம்பால் சேவகனை அடிக்கப் போகிருன்; அப்பொழுது ஈசுவரன் தலையில் மண் கூடையோடு அரசனுக் கருகில் வருகிருர்.]

ஈசு:—(குனிந்து) சாமீ! கும்பிட்றேன்.

சேவ:—(நடுநடுங்கி) மவராசா! இவந்தான் வேலையாளு; வேலெயெச் செய்யாமெ பாடிக்கிட்டும் ஆடிக்கிட்டும் திரியருன். நாங்க சொல்லறத்தெயே கேக்கறதில்லீங்க.

அரசன்:—(மிகுந்த கோபத்தோடு ஈசுவரனைப் பார்த்து) ஓகோ! அவ்வளவு மதம் கொண்டவனு இவன்? அடே! வா இப்படி; உன்னுடைய திமிருக்குத் தக்க மார்க்கம் செய்கிறேன்.

[அரசன் பாய்ந்து ஈசுவரனது முதுகில் பொற்பிரம்பால் அடிக்கிருன்; அந்த அடி அங்கிருந்தோர் யா

வர்மீதும் பட, யாவரும் "அப்பாடா" என்று முதுகில் கையை வைத்துக் கொள்ளுகின்றனர். அரசனும் தனது இடது கையால் முதுகைத் தடவிக் கொள்ளுகிறான். அப்போது ஈசுவரன் தான் கொணர்ந்த மண்ணை உடைப்பில் கொட்டி விட்டு மறைந்து போகிறார்.]

மந்திரி:—(வணக்கமாக) மகாராஜா! அவனுக்குப் பதிலாக என்னை அடித்து விட்டீர்களே!

சேவ:—இல்லே சாமீ! எம்மேலேல்ல அடி பட்டுது.

மற்றவர்:—எங்கமேலேல்ல பட்டுது.

அரசன்:—நீங்கள் சொல்வதெல்லாம் பொய். நான் வேலைக்காரனை அடிக்கப்போனேன். அது தவறி என் முதுகிலேயே யல்லவோ பட்டது. இதோ பாருங்கள் தழும்பை.

மற்றவர்:—இதோ! பாருங்க; எங்கமேலெயும் தளும்பு தெரியுது.

அரசன்:—(எல்லாவற்றையும் பார்த்து) என்ன ஆச்சரியம்! நான் அடித்த ஓர் அடி இத்தனை மனிதரின்மேலும் எப்படிப் பட்டது! இங்கே இருந்த கூலியாளெங்கே?

யாவரும் திகைத்து நாற்புறங்களிலும் பார்க்கிறார்கள்.

மந்திரி:—நமக்கெதிரிலிருந்த ஆள் திடீரென்று எங்கேயோ மாயமாகப் போய் விட்டானே!

சேவ:—(உடைப்பைப் பார்த்துவிட்டு) மவராசா! மவராசா! இந்த அரிசியத்தெப் பாருங்க மவராசா! இஞ்சே இருந்த ஒடெப்பெயே காணுமே!

அரசன்:—(திகைப்படைந்து) அடேடே! இதென்ன விந்தையிலும் விந்தையாக இருக்கிறதே! அந்தக் கூலியானை நான் அடித்த உடன்

அவன் தன்னுடைய கூடை மண்ணை உடைப்பில் கொட்டிய தாக நினைவிருக்கிறது. அதனால் உடைப்பு முழுதும் எப்படி அடைபட்டது? நூறுவண்டி மண் கொட்டினாலும் அடைபடாத பள்ளம் ஒரு க்ஷணத்தில் மாயமாக மறைந்துபோய் விட்டதே! ஆச்சரியம்! ஆச்சரியம்!! நிரம்பவும் ஆச்சரியம்!!!

[அரசன் அப்படியே மூக்கில் கையை வைத்த வண்ணம் ஸ்தம்பித்து நிற்கிறான்.]

ஈசுவரன்.—(ஆகாயத்தில் அசரீரியாக நின்று) ஏ! மகாராஜனே! ஏ! அரிமருத்தன பாண்டியனே!

அரசன்:—(திடுக்கிட்டு) என்ன இது! என்னை யார் அழைக்கிறார்கள்? என்பெயரைச் சொல்லி யழைக்கக் கூடியவன் யாவன்? (நான்கு பக்கங்களிலும் திரும்பித் திரும்பிப் பார்க்கிறான்.)

மந்திரி:—ஆகாயத்திலிருந்தல்லவா ஓசை கேட்கிறது!

அசரீரி:—ஏ! அரசனே! நீ நல்ல சிவபக்தனாயிருந்தும், உன்னுடைய புத்தி ஏன் இப்படிக் கெட்டுப் போனது? நம்முடைய பரமபக்த ராகிய வாதவூரரின் உண்மையான யோக்கியதையை அறிந்துகொள்ளாமல் நீ அவர் விஷயத்தில் எவ்வளவு பெருத்த அபராதியாகி விட்டாய்! நீ சம்பாதித்த பொருளெல்லாம் தரும வழியிலே வந்ததாகையால், அந்த பக்தசிரோன்மணி, அவற்றை நமக்கும், நம்மடியார்க்கும் விநியோகித்தார். அதை நீ உணராமல் அவரைப் பலவாறு வருத்தினாய். உன் மூடமதிக்கு அதை அறிவுறுத்தும் பொருட்டு நரிகளைப் பரிகளாக்கிக் கொணர்ந்து கொடுத்தோம். அவைகள் இரவிலேயே நரிகளாக மாறிப் போக, நீ ஏமாறினாயே, அப்போதாகிலும், நீ அவருடைய பெருமையைப் பற்றி நினைந்தாயா? அவரை மேலும் வதைக்கச் செய்தாய்; அதைக் கண்டு பொறாமல், வைகையாற்றை மதுரை மீது வரச்செய்தோம். அப்போதும் உனக்கு அந்த உத்பாதங்களின் காரணத்தை அறிந்துகொள்ளும் திறமையில்லாமல் போய் விட்டது. அதுநிற்க, சிவபக்தியில் மிகுந்த உத்தமியானவந்தியின்

கூலியாளாகவந்து இப்போது உன்னிடத்தில் பிரம்படிபெற்றோம். நம்முடைய அடியாளான வந்தியின்பாகத்தை நாமே அடைத்தது மன்றி அவளையும் மோக்ஷலோகத்தில்சேர்ப்பித்தோம். தெய்வீக மான பல சம்பவங்கள் நிகழ்ந்ததைக் கண்டும், வைதிகச் சிரேஷ்டரான வாதவூரரின் அருமையாற்றல்களை நீ அறிந்து கொள்ளவில்லையே! இனியாகிலும் நீ அவரை வந்தித்து வழிபட்டு அவருடைய மன்னிப்பைப் பெற்று நல்ல புத்தியோடு வாழக் கடவை. உனக்கு இம்மையிலும், மறுமையிலும் நல்ல கதியைத் தேடி உதவிய அந்த உத்தமனை இனி ஒரு க்ஷணமும் நீ வருத்த, நாம் ஸகியோம்.

அரசன்:—(ஆகாயத்தை நோக்கிக் கைகூப்பிய வண்ணம் தனக்குள்) ஆகா! எத்தகைய மூடனானேன்! என்னைப் போன்ற பெரும் பேதை எவனு மிருக்கமாட்டான்! (அசரீரியை நோக்கி) சுவாமீ! மந்த மதியினனான எனக்கு புத்தி புகட்ட, தேவ ராலும் யாவராலும் காணலாகாத தேவரீருடைய திருப்பாதங் கள் நோக, மதுரைக் கெழுந்தருளி, பொன்போன்ற பரிசுத்த மான உமது திருமேனிவாட, மண்ணுஞ் சுமந்து, பிரம்படியும் பெற்றீரோ! ஏ! சம்போ! என்னையாண்ட சங்கரா! மகாதேவா! உம்முடைய நினைவினால் இந்த அண்டபிண்ட சராசரங்களையெல் லாம் அழித்து நாசம்செய்யவல்ல, முழுமுதற் கடவுளான உம் மை நானே அடிக்கும் திறமையுடையவன்! வாதவூரது விஷபத்தி லும், உமக்கும் கொடிய பாதகம் செய்த எனக்கு மீளா நரக மல்லவோ சம்பவிக்கும். ஈசுவரா! இந்தப் பழியை நான் எப் படித் தொலைப்பேன்? இந்தப் பாவத்தை எவ்விதத்தில் விலக் குவேன்? ஏ! கருணைக்கடலே! அருள்சொரி வள்ளலே! நீரே இதற்கொரு மார்க்கம் தெரிவித்து நாயேனை ஈடேற்ற வேண்டும்.

[அப்படியே சாஷ்டாங்கமாத் தெண்ட னிட்டெழுந்து கன்னத்தில் அடித் துக்கொண்டு கரங்கூப்பிக் கண்ணீர் வடித்து நிற்கிறான்.]

அசரீரி:—அரசனே! பயப்படாதே! இனி உனக்கு மிகுதியுள்ள ஆயுட்காலத்தை நீ வேதவழியிலே நின்று நடத்தி, நீதி செலுத்தி முடிவில் நம்முடைய பாதம் வந்து சேருவாய். நீ நம்முடைய சந்ததியானுகையால், உன்னை இந்த தண்டனையோடு விடுத்து மன்னித்தோம். நீ உடனே போய் வாதவூரருக்கு சந்தோஷ முண்டாகும்படி நடந்துகொள்.

[ஈசுவரன் மறைந்து போகிறார்.]

அரசன்:—சுவாமீ! உம்முடைய சரணாரவிந்தத்துக்கு ஆயிரங்கோடி நமஸ்காரம் செய்கிறேன். இந்த பாக்கியம் யாருக்குக் கிடைக்கும்! என் அண்ணலே! உம்முடைய திருக்கட்டளையை சிரமேற் கொண்டேன். இப்போதே போய் உமது திருவுளத்தை நிறைவேற்றுகிறேன்.

[அரசன் முதலியோர் போகின்றனர்.]

---

## நான்காவது காட்சி.

இடம்:—சோமசுந்தரக் கடவுளின் திருவாலயம்.

காலம்:—பிற்பகல்.

[மாணிக்கவாசகர் மெய்ம்மறந்தவராய் ஈசுவரனைத் தியானம் செய்துகொண்டு தனிமையில் நிற்கிறார்.]

(அகவல் : இராகம் எதுகுல காம்போதி.)

" ஆதியா யறிவா யண்டமா யகண்ட
சோதியாய் விரிந்து சுடர்விரி மணியாய்ப்
பாவுவார் நெஞ்சிற் பரவிய மாட்சியாய்
இரவுபக லற்ற ஏகாந்த காட்சியாய்
ஆணும் பெண்ணும் அல்லாப் புகலாம்
தாணுவாய் நின்ற சத்தாம் தனிச்சுடர்
எள்ளு மெண்ணெயு மெப்படி யப்படி
உள்ளும் புறம்பும் உலாவிய ஒருபொருள்

தீராப் பிணியாம் சென்ம மறுக்க
வாரா வரவாய் வந்த சஞ்சீவி !
ஆலைக் கரும்புபா லமுதக் கட்டிநீள்
சோலைக் கனிபலாச் சுளைகத லிக்கனி !
பாங்குறு மாங்கனி பால்தேன் சருக்கரை
ஓங்குகற் கண்டுசேர்த் தொன்றாய்க் கூட்டி
அருந்திய ரசமென அறிஞர் சமாதியிற்
பொருந்திய வின்பம் பொழிசிற் சுகோதயம்
எங்கணு நிறைந்த வியல்பென் றனக்குச்
செங்கையால் விளங்கத் தெரிந்தமெய்த் தேசிகன்
அடிமுடி யில்லா அரும்பொருள் தனக்கு
முடியது இதுவென மொழிந்திடு முதல்வன்
சென்மமுள் ளளவுந் தீரா திழுக்கம்
கன்மம் விடாதெனக் காட்டிய வள்ளல்
தருமமும் தானமும் தவமும் புரிபவர்க்
குரிமையா யவரோ டுரிமை கலப்பவன்
தன்னுயிர் போலத் தரணியில் மருவிய
மன்னுயி ரனைத்தையும் வளர்த்திடு வேந்தன்
தஞ்சமென் றடைந்த தாபதர் தம்மை
அஞ்சலென் றருளு மறிஞர் சிகாமணி
நற்குண னெல்லா நண்ணிய பெருந்தகை
சிற்குண வாரி திருவருட் செல்வனைப்
பாடியு நாடியும் பணிந்தெழுந் தன்பால்
ஆடியும் அரற்றியும் அகங்குழை வெய்தியும்
உடலங் குழைய உரோமம் சிலிர்ப்பப்
படபடென் றுள்ளம் பதைத்துப் பதைத்துப்
பாங்குறு நெட்டுயிர்ப் பாகிப் பரிதவித்
தேங்கி யேங்கி யிரங்கி யிரங்கி
ஒய்ந்தபம் பரம்போ லொடுங்கியே சிறிது .
மேய்ந்த விழிக ளிமைப்பது யின்றிச்
சோர்ந்து சோர்ந்து துவண்டுதுவண்டுமெய்
யார்ந்த வன்போ டவசமுற் றடிக்கடி
உள்நடுக் குறவே யுருகியே சற்றுத்

தண்ணமர் மொழியும் தழுதழுத் திடவே
உள்ளும் புறம்பும் ஒருமித் துருகி
வெள்ளநீர் போல விழிநீர் பெருக்கிக்
கன்று பசுவைக் கருதிக் கதறிச்
சென்றுசென் றோடித் திகைப்பது போல
என்புநெக் குடைய இருகாங் குவித்துப்
புன்புலால் யாக்கை பொருந்தா தினியென
உணர்ந்துணர்ந் தன்பா யுவகைமேற் கொண்டினி
கணம்பிரி யேனெனக் கருதியந் நினைவால்
எல்லா நிறைந்த இறைவன் செயலெனக்
கல்லா வெனக்கும் கருணைசெய் கடவுளே
குருவரு ளானே கூடுத லல்லால்
திருவரு ளுறுதெனத் தெரிந்திட உரைத்தோய்!
விருப்பு வெறுப்பினை வேரறப் பறித்துக்
கருப்புகா தென்னைக் காத்தருள் செய்தோய்!
எண்ணிய வெண்ண மெல்லா மறிந்தோய்!
மண்ணிலும் விண்ணிலு மாக வலைந்து"
புண்படு நெஞ்சொடு புலம்புவே னென்றனைக்
கண்கொடு காண்பையோ! காங்கொடுத் தாள்வையோ!
அபய மபயம் ஐயனே! அபயநின்
உபயம லர்ப்பத முதவியாள் சம்புவே!

ஏ! சங்கரா! மகாதேவா! என்னப்பனே! உம்மையே சதா காலமும் நினைத்தழுது உருகி உமது திருக்கோவிலே கதியாக வந்தடைந்தேன். என் மனதில் இன்னமும் ஒரு குறையிருக்கிறது. இந்தக் கட்டை யழியுமுன் தில்லையில் உம்முடைய திருக்கோலத்தைக் காணவேண்டு மென்பதே என்னுடைய கடைசியான விருப்பம். அதை முற்றவைத்து, உம்முடைய அடிமையான என்னை உமது பாத பங்கயங்களிற் சேர்த்துக்கொள்ள வேண்டும் ஈசனே!

(இராகம் நாதநாமக்கிரியை.)

நீரிலாப் பயிரானேன் நிலவிலா யிரவானேன்
வேரிலா மரமானேன் வேந்திலா நகரானேன்

ஒளியிலா மணியானேன் உயிரிலா உடலானேன்
அளியிலா மனதானேன் அறிவிலாப் பித்தனானேன்
இலையிலா மரமானேன் இரவியிலாப் பகலானேன்
கலையிலாச் சபையானேன் கருணையிலா மனதானேன்
மணமிலா மலரானேன் மக்களிலா வீடானேன்
குணமிலா அழகானேன் கோவிலிலா நாடானேன்.

[கரங்குவித்து மயங்கி நிற்கிறார். இரண்டாவது மந்திரி முதலிலும் அரசன் பிந்தியுமாக வேகமாய் வருகின்றனர்; பிறகு சேவகர் வருகின்றனர்.]

அரசன்:—மந்திரி! வாதவூரர் எங்கே போயிருப்பார்? ஊரெல்லாந் தேடிப்பார்த்தேன். அவர் எங்கும் காணப்படவில்லையே!

மந்திரி:—கோவிலின் வாசலிற் கண்டதாக சேவகன் தெரிவித்தான். அவர் இங்கேயும் காணப்படவில்லையே. ஒருவேளை கோவிலுக்குள் இருக்கலாம். உள்ளே போய்ப் பார்ப்போம் வாருங்கள்.

[இருவரும் உள்ளே போய் அங்கிருந்த மாணிக்கவாசகரைக் காண்கிறார்கள்.]

அரசன்:—(மாணிக்கவாசகரது காலில் சாஷ்டாங்கமாக விழுந்து) ஸ்வாமி! அபயம்! அபயம்! காப்பாற்றவேண்டும்.

(கானகத்தில் நானலைந்து கதற விதிவசமோ - என்ற
பாட்டின் வர்ணமெட்டு.)

(இந்துஸ்தானி - ரூபகம்.)

மாதவத்தோய்! மாமறையோய்! மாற்றிலாத மாண்புடையோய்!
பேதையினேன் தீதுசெய்தேன்! ஏழையினி யேதுசெய்வேன்!
தூய்மையே உருவாய்வந்தோய்! தோஷமிகக் கொடியனாகித்
தீமைகளையே புரிந்தேன் தீநரகிற் கருகலானேன்;
பேதைமையாற் செய்தபிழை பெருமனதால் பொறுத்திடுவீர்
மாதுமையாள் பாகமணி நாதனருள் பேறுபெற்றோய்!
போதகனே! மேன்மைநிறை புண்ணியனே! தாள்பணிந்தேன்;
பாதகனைப் பொருளால் பாலித்திடும் புகலிடநீர். (மா)

ஸ்வாமீ! மதியிழந்தேன்; கண்ணியமிழந்தேன்; மகா உத்தம புருஷரான உமது உண்மையான யோக்கியதையை அறிந்துகொள்ளக் கூடாத பாமரனுனேன்; என்னுடைய மேன்மையை இழந்தேன்; குலதருமத்தை மறந்தேன்; நன்மையே புரிந்த புண்ணியவானுன உம்மை அவமதித்து வருத்தினேன்; ஈசுவரனுக்கு தேவரீர் செய்த திருப்பணிகளை சந்தோஷமாக எற்றுக்கொள்ளாமல், சம்மதி யின்மையையும், முனிவையும் காட்டி, ஈசுவரனது விஷயத்திலும் பெருத்த அபராதியானேன்.

வாத:—(திடுக்கிட்டு உணர்ச்சிபெற்று) என்ன ஆச்சரியம்! யார் இவர்? அரசனல்லவா! தமது பொருளையெல்லாம் அபகரித்த கள்வனை இவர் பணியும் காரண மென்னவென்பது தெரியவில்லையே!— மன்னவா! என்ன விபரீதம் இது! எழுந்திரும்; இந்தத் தாணியில் யாவருடைய முடியும் படியப்பெற்ற பாதங்களையுடைய நீர் இப்படிப் பிறரைப் பணிதல் தகுமா? இது உம்முடைய மதிப்பைக் குறைத்துவிடுமே. தயவுசெய்து எழுந்திரும்.

அரசன்:—(கைகூப்பி) ஸ்வாமீ! ஏழையை மன்னித்தாலன்றி உம்முடைய மேன்மை பொருந்திய பாதங்களை விட்டகலவே மாட்டேன். உமது விஷயத்தில் நான் மகா கொடிய பாதகனுனேன்.

வாத:—ஓகோ! நானோ மன்னிப்பது? நீரன்றோ என்னை மன்னிக்க வேண்டுவது.

அரசன்:—பிராம்மணோத்தமரே! நானும் என்னுடைய முன்னோர்களும் எத்தனையோ கோடி ஜென்மங்களிற் செய்த புண்ணியத்தின் பலனாக தேவரீர் அவதரித் தெழுந்தருளினீர்; என்னுடைய பிறவித் துன்பங்களைக் களையும் மருந்தானீர்; இகபரமிரண்டிலும் நான் நன்மை யடையும் வழியைத் தேடினீர்; எனக்குத் தெரியாமலே பேரின்பத்தை எனக்குத் தேடிவைத்தீர். இவ்விதம் ஒப்புயர்வற்ற பேருதவி செய்த மகாத்மாவின் மகிமையை யறியாமல் நான் மூட மதியால் உம்மைக் கடிந்து

பலவாறு வருத்திவிட்டேன்; நெஞ்சில் சிறிதும் இரக்கமற்றவனாய், உம்மைப் பல கொடுமைகளுக்காளாக்கினேன்; பாழும் நரகிற்கே போகத்தகுந்த துரோகியானேன்; பேதையாகிய நான் செய்த பல குற்றங்களையும் மன்னித்தருள வேண்டும். ஸ்வாமீ! உம்முடைய மன்னிப்பைப் பெறுவிட்டால், நான் ஒரு நாளும் நற்கதி யடையமாட்டேன். நானும், என்னுடைய சந்ததியாரும் நாசமடைவோம். எங்கள் குலமே நசித்துப்போம். இந்தப் பாண்டிய நாடும் பாழ்த்துப் போம். சிவத்ரோகிகள் என்னும் பெயர் எனக்கும் என்னைச் சார்ந்தோருக்கும் வராமல் காப்பது உம்முடைய பொறுப்பு. உம்முடையதான இந்தப் பாண்டிய நாட்டின் ஆளுகையை முன்போலவே திரும்பவும் ஏற்று துஷ்ட நிக்ரஹம் சிஷ்ட பரிபாலனம் செய்து, எனது ஏராளமான செல்வத்தையும் உமதிச்சைப்படி ஈசுவரனுடைய திருப்பணியிலும், அவனடியார் விஷயத்திலும் செலவழித்து என்னையும் நல்வழிப் படுத்தி ஈடேற்றி யருள வேண்டும் ஸ்வாமீ!

வாத:—(புன்சிரிப்போடு) மகிபனே! உம்மீது எனக்கு சிறிதும் வருத்தமில்லை. என்னுடைய முன் ஜென்ம கருமத்தால் விளைந்த பயன்களை நான் அநுபவித்தேனே யன்றி, இதில் நீர் என்ன செய்தீர்? இது சிறிதும் உம்முடைய குற்றமாகாது; நீர் கவலைப் படவேண்டாம்; எழுந்திரும். (கையைப் பிடித்துத் தூக்க அரசன் எழுந்திருக்கிறான்.) மன்னவர் திலகமே! உம்மைப்போன்ற நற்குணமுடைய வேந்தன் இந்த உலகத்திலேயே கிடைப்பனோ! உம்முடைய சிவபக்தி யாருக்குண்டாம்! சந்திரசேகரப் பெருமானுடைய விஷயத்தில் நீர் செலவு செய்யும் பொருளுக்கு நான் செலவு செய்தது ஒரு சிறிதும் ஈடாமோ? இந்த அற்பப் பொருளை ஈசுவரன் விஷயத்தில் நான் விநியோகம் செய்தது உம்முடைய மனதிற்கு ஒப்பவில்லையென்று சொன்னால் அதை உலகம் ஏற்குமோ? உண்மைக் கடுக்குமோ? நடந்தவை யெல்லாம், என்னுடைய கர்ம வினையைப் போக்கி, என்னை நல்வழிப்படுத்

தும் பொருட்டு ஏற்பட்டனவே யொழிய அவற்றால் உம்மை யாதொரு இழிவும், பாவமும் பிடிக்கா. நீர் நீடூழி காலம் இந்திரனைப் போல சகல போகங்களோடு அரசாட்சி செய்ய எம்பெருமான் அநுக்கிரகிப்பார். பரிசுத்தரான அந்தக் கண்ணுதலார் உங்கள் குலதெய்வமாதலால் அவரே உங்கள் குலோத்தாரகராய், உம்முடைய காரியங்களை நடத்திவர வல்லார் ; நான் உம்மை யடுத்திருந்த காரணத்தால் வைதிக தருமமும், லௌகிக தருமும் எனக்கு நன்றாகத் தெளிவாயின. மெய்ம்மையான சித்தசுத்தி யுண்டாயிற்று. ஒரே கடவுளாகிய பரமசிவத்தினிடம் பக்திதோன்றியது. அதனால் மாயையின் விருத்தியான பந்தமாம் இந்த வாழ்க்கை விளைவினுட்பட்ட துன்பம் வெந்தது. கருணையாகிய மெய்யுணர்வு இன்பத்தைத் தந்து தன்மய மாக்கியது. இனி,

(விருத்தம் - தோடி.)

" சச்சிதா நந்த மாமத் தனிப்பர சிவனே தன்ன
திச்சையா லகில மெல்லாம் படைத்தளித் தீறு செய்யும்
விச்சைவா னவரைத் தந்த மேலவன் பிறவித் துன்பத்
தச்சமுற் றடைந்தோர்க் கானு வின்பவீ டளிக்கு மன்னான். "

நிருபனே! நிகழ்ந்தவற்றைக் குறித்து சிறிதும் கவலைப்பட்டு வருந்தவேண்டாம். நீர் வழக்கப்படி உமது நாட்டை யாண்டு கொண்டிரும். ஞானமயமாகிய தில்லை மூதூரைப்பார்க்க வேண்டுமென்று எனக்கு நெடுநாளாக விருப்பமாதலால், நான் அவ்விடத்தையும், இன்னம் மற்ற சிவஸ்தலங்களையும் பார்த்து விட்டு வருகிறேன். இவ்விஷயத்தில் நீர் யாதொரு ஆக்ஷேபனையும் சொல்லாமல், போகும் படி என்னை அநுமதிக்கவேண்டும்.

அரசன்:—ஸ்வாமி! தாயைப்பிரிந்த கன்றென உம்மை விட்டுப் பிரிந்து நான் இனி எப்படி அரசுபுரியப்போகிறேன்? உமது திருவுளத்துக்கு விரோதமாகச் சொல்லவும் அஞ்சுகிறேன். இதில் நான் கேட்டுக் கொள்ளக் கூடிய விஷயம் ஒன்றிருக்கிறது. பொன்னம்பலமாகிய தில்லை முதலிய விடங்களைப் பார்த்து விட்டு தேவரீர் மிகவும் சீக்கிரமாகத் திரும்பிவந்து இந்த நாட்டின் காரியங்களை

ஒப்புக்கொண்டு எனக்கு நல்வழி காட்டியாயிருந்து என்னைக் காப்பாற்ற வேண்டும். இதுவே என்னுடைய வேண்டுகோள்.

வாத:—மகிபனே! வருந்தவேண்டாம். நாம் திரும்பவும் விரைவில் கூடுவது எம்பெருமானுடைய திருவருளானல் அப்படியே நடைபெறும்; அதைப்பற்றிக் கவலையுற வேண்டாம். எனக்கு அநுமதி தரவேண்டும்.

அரசன்:—மந்திரி! உடனே போய் எல்லாச் சிறப்புக்களுடன், ஒரு முத்துப் பல்லக்கைக் கொண்டு வாரும்.

மந்திரி:—இதோ கொணர்ந்தேன்.

[இரண்டாவது மந்திரி போய் சகல பரிவாரங் களோடு ஒரு பல்லக்கைக் கொண்டு வருகிறான்.]

அரசன்:—ஸ்வாமி! இதில் எழுந்தருள வேண்டும். வேண்டாமென்று சொல்லாமல் இந்தப் பாதகாணிக்கையை ஏற்றுக்கொண்டாலன்றி, என்னை மனதார மன்னித்ததாக ஏற்படாது. தயவுசெய்ய வேண்டும்.

வாத:—உமது இச்சைப்படியே ஆகட்டும்.

[வாதவூரர் பல்லக்கில் ஏறிக்கொண்டு சிவ ஸ்தோத்திரம் செய்கிறார்.]

(இராகம் சுருட்டி - தாளம் ஆதி.)

1. "முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணஞ்
சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அத்தனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே.

2. செம்மைமல மறியாத சிதடரொடுந் திரிவேனை
மும்மைமல மறுவித்து முதலாய முதல்வன்று
னம்மையுமோர் பொருளாக்கி நாய்சிவிகை யேற்றுவித்த
அம்மை யெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே."!

[ஆட்கள் பல்லக்கைத் தாங்கிப்போகின்றனர். அரசன் மந்திரி முதலியோர் நடந்து நெடுந்தூரம் வழித்துணை செல்கின்றனர்.]

---

# ANOTHER GOLD MEDAL TO-DAY.

---

புதுவை செந்தமிழ் வாசகசாலை யாரால்
கொடுக்கப்பட்ட நற்சாக்ஷிப் பத்திரமும்
தங்கப்பதக்கப் பரிசும்.

கனம் வடுவூர்

## கி. துரைசாமி ஐயங்கார் அவர்களுக்கு

அநேக வந்தனம்; உபயக்ஷேமம்.

கற்றோர் மணியே!

நீவிர் தற்கால நவீனகமுறையில் ஜனனுகூலத்திற்கு உடந்தையான நீதிகளைப் புகுத்தி ஒவ்வொரு மதிதோறும் தென்னுடெங்கும் நிலவ விடும் மனோரஞ்சனிச் செல்வியை யாம் அன்புடன் வரவேற்கின்றோம். அதன்கண் படர்ந்துவந்த மேனகா, திகம்பரசாமியார் என்னும் நாவல்களை வெகு பிரியத்துடன் வாசித்து இன்பெய்தினோம். தங்களாலெழுதப்படும் நாவல்களை யாம் வாசிக்க ஆரம்பித்து விடின் வேறெவ்விதமான அவசர வேலைகளிருப்பினும் அவைகளையும் மறந்து அந்நாவலிற் செறிந்துள்ள சொற்சுவை பொருட்சுவைகளால் வசியமாக்கப்பட்டு அது வாசித்து முடிவெய்திய பின்னர் அவைகளைக் கவனிக்கும்படியாய் விடுகின்றது. இதை நோக்க தாங்கள் நாவல் எழுதும் ஆற்றலில் அதிகத் தேர்ச்சி யடைந்திருப்பதன்றி ஜனங்களது கவர்ச்சியை முழுதும் கிரகிக்கத் தகுந்த அரிய விஷயங்களை தாங்கள் திரட்டித் தீட்டிவிடும் நவீனகமான முறையானது எம்போன்றோரெல்லோரும் மிகுதியாய் மெச்சத் தகுந்ததாக வொளிர்கின்றது. அதில் ஒவ்வொரு பக்கத்திலும் கான

ப்படும் பல நன்னீதிகளை அவசியம் கவனிப்போர்கள் நிச்சயமாக நல்லவர்க ளாவார்களென்பது உறுதி. தங்களது நவீனக முறையிற் சிறந்த பேராற்றலை நோக்கித் தங்கட்குப் பலரும் பல நற்சாக்ஷிப் பத்திரங்களும் தங்க வெள்ளிப் பதக்கப் பரிசுகளும் தந்து தங்களை உற்சாகப்படுத்தி இருக்கின்றனர். யாமும் எமது செந்தமிழ் வாசக சாலையாரும் தங்களது ஆற்றலையும் திறமையையும் வியந்து இப் பொற்பதக்கப் பரிசை மனப்பூர்வமான வந்தனத்துடன் அளிக்கின் றோம். இதைக்காணும் பல மேதாவிகளும் இன்னும் இதுபோன்ற பதக்கங்களும் நற்சாக்ஷிப் பத்திரங்களும் தந்துதவி தங்கட்கு உற் சாக முண்டுபண்ணி இன்னும் இதுபோன்ற பல நவீனகத்தை வரை யத்தகுந்த பேராற்றலை அதிகப்படுத்துவார்களென்று நம்புகிறோம்; ஆண்டவன் துணை செய்க.

செந்தமிழ் வாசகசாலை, 86 நெ.
காளத்தீஸ்வரன் கோவில் தெரு, புதுவை.
30—3—1921.

இங்ஙனம்

அ. ந. நரசிங்கமுதலி,

அக்கிராசனன்.

